# பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்

முனைவர் ச. சிவகாமி




உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்

# பத்தொன்பதாம் நூற்றாண்டுத்
# தமிழ் இலக்கியம்

ச. சிவகாமி

முதுநிலை ஆய்வாளர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
சி.ஐ.டி. வளாகம் தரமணி, சென்னை-600113

# BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title | : | Pattonpatām Nūrrāntut Tamil Ilakkiyam |
| Author | : | Dr. S. SIVAKAMI<br>Senior Research Fellow,<br>International Institute of Tamil Studies,<br>CIT Campus, Taramani,<br>Madras-600113 |
| Publisher & Copy right | : | International Institute of Tamil Studies,<br>CIT Campus, Taramani,<br>Madras-600113 |
| Publication No | : | 181 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | Feb 1994 |
| Edition | : | First |
| Paper used | : | Tamil nadu Creamvove 16 kg |
| Size | : | 21X14 cms |
| Printing types | : | 10 point |
| No. of Copies | : | 1200 |
| No. of pages | : | XII + 384 |
| Price | : | Rs. 60/- |
| Printers | : | Kavinkalai Achagam<br>2/141 Kandhasami Nagar,<br>Palavakkam, Madras-600041<br>Ph. No, 41 71 41 |
| Artist | : | Sathya |
| Subject | : | A short history of 19th Century Tamil Literature |



**டாக்டர் அன்னிதாமசு**
இயக்குநர்—பொறுப்பு
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600113

# பதிப்புரை

பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வளம் குறித்து அறிய விழைவோருக்குச் சிறந்ததொரு கையேடாக ஆக்கப் பெற்றுள்ளது முனைவர் ச. சிவகாமியின் 'பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்' என்ற இந்நூல்.

சென்னைப் பல்கலைக் கழக முழுநேர முனைவர் பட்ட ஆராய்ச்சியாளராக இவர் நிறுவனத்தில் சேர்ந்து உழைத்து, படித்த காலை வெளிப்பட்ட இவர் திறம், இவரை நிறுவனப் பணித்தொகுப்பில் இணைத்தமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது.

முனைவர் பட்ட ஆய்வுப்பொருளாக அமைந்த பெருங்களனின் ஒரு பகுதி, 'இலக்கியப் பொருட்பகுப்பாய்வு' என்ற தலைப்பில் 1991-இல் நிறுவன வெளியீடாக வந்து (வெளியீட்டு எண் 157) பாராட்டுப்பெற்றது. அதன் மற்றொரு பகுதி தற்போது இந்நூல் வடிவம் பெறுகின்றது.

தமிழ் மாணவர்க்கும், ஆர்வலருக்கும், இலக்கிய வரலாற்றாராய்ச்சியாளருக்கும் இந்நூல் உதவியாகி நல்ல வரவேற்பைப் பெறுமென்று எதிர்பார்க்கிறோம்.

நூலாசிரியருக்கு எம் பாராட்டும் வாழ்த்தும்.

சென்னை-113
22-2-94

அன்புடன்,
**அன்னிதாமசு**

# முன்னுரை

தமிழ்மொழியின் பழமையும் பரந்து விரிந்த அதன் இலக்கியப் பரப்பும் நூற்றாண்டு நோக்கில் இலக்கிய வரலாறு படைப்பதைப் பொருத்தமாக்குகின்றன. அவ்வகையில் பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கியங்களை இயன்றவரை வெளிப்படுத்த வேண்டும் என்ற நோக்கில் எழுந்துள்ள முயற்சி இது.

1981இல், 'தமிழில் இலக்கியப் பொருள்—பத்தொன்பதாம் நூற்றாண்டு' (Content in Tamil Literature-19thCentury) எனும் பொருளில் நிறுவனத்தின்வழி, சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு அளிக்கப்பட்ட முனைவர் பட்ட ஆய்வேட்டின் ஒரு பகுதி இது. தொல்காப்பியர் அக, புறப் பொருட்களுக்கு அவற்றின் பொருட்கூறுகளைத் திணை, துறைகளில் பகுத்து வகுத்துள்ளமை போன்று இலக்கிய உலகில் மிகுந்திருக்கும் பிறவற்றின் பொருட் கூறுகளையும் பகுப்பாய்வு செய்தலை அவ்வாய்வேடு தன்னோக்க மாகக் கொண்டது. அதற்கிணங்கப் பக்தி, அறம் என்பனவற்றின் பகுப்பாய்வு பத்தொன்பதாம் நூற்றாண்டைக் களமாகக் கொண்டு நிகழ்த்தப்பட்டது.

அதற்காக ஆய்வுப்பணியில் ஒரு பகுதியாகப் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவரையும் அவர்தம் படைப்புகளையும் தொகுத்தல் அமைந்தது. அவை பற்றிய ஆய்வுச் செய்திகள் 'பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கியப் போக்கு' எனத் தனிக் கட்டுரையாக உள்ளடங்கியது. தொகுப்பு, இலக்கிய வரிசை, புலவர் வரிசை என இருநிலைகளில் தயாரிக்கப்பட்டுப் பின்னிணைப்பாகக் கொடுக்கப்பட்டது.

1990இல் அன்றைய நிறுவன இயக்குநர் முனைவர் சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் ஆய்வேட்டை நூலாகக் கொணர ஊக்க மளித்தார். ஆய்வேட்டின் பரப்பு மிகுதி கருதி நூல் இருபகுதி களாக வெளியிடத் திட்டமிடப்பட்டது. அதன்படி 1991 சூனில்

ஆய்வேட்டின் ஒரு பகுதி அதன் இயல்பிற்கேற்ப 'இலக்கியப் பொருட் பகுப்பாய்வு (பக்தியும் அறமும்)' எனும் தலைப்பில் வெளி வந்துள்ளது. எஞ்சிய பகுதி பத்தொன்பதாம் நூற்றாண்டை முன்னிறுத்துவதால் 'பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்' எனும் பெயரில் இப்பொழுது வெளிவருகிறது.

பத்தொன்பதாம் நூற்றாண்டினைச் சிறப்பித்துப் பேராசிரியர் மயிலை சீனி, வேங்கடசாமியும் (பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் 1800-1900) பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தமும் (பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் உரைநடை வளர்ச்சி) நூல்கள் படைத்துள்ளனர். தற்பொழுது முனைவர் அ.மா.சாமி பத்தொன்பதாம் நூற்றாண்டு இதழியல் வரலாற்றை அளித்துள் ளார். இவற்றினின்றும் மாறுபட்ட நிலையிலேயே இந்நூல் அமை கிறது. எனினும் மயிலையார் நூல் பெருமளவு பயன்கொளப்பட் டுள்ளது. இலக்கியவரலாற்றுப் பார்வையில் 19இன் தமிழ் இலக்கிய வரலாற்றிற்கு அவரே முன்னோடியும் சிறப்பாக அடித்தளம் நாட்டிய பெருமைக் குரியவருமாவார் என்பதில் ஐயமில்லை.

இந்நூலின் முதற்கட்டுரையாக அமையும் தமிழ் இலக்கிய வரலாற்றுநிலை என்பது இந்நூலாக்கத்திற்காகப் புதிதாக இணைக்கப்பட்டதாகும். இலக்கிய வரலாறு என்றால் என்ன என்பது பற்றியும் தமிழில் இதுவரை எழுந்துள்ள இலக்கியவரலாறு கள் பற்றியும் இக்கட்டுரை ஆய்ந்துரைத்துளது. இதற்கு வித்திட்ட வர் இன்றைய நிறுவன இயக்குநர் (பொறுப்பு) முனைவர் அன்னி தாமசு அவர்கள் ஆவர்.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கியப் பின்புலத்தினை விளக்கும் நிலையில் 'பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கியப் போக்கு' எனும் அடுத்த கட்டுரை அமைகிறது. இதன்கண் இலக்கிய வளர்ச்சிக்குத் தூண்டுதலாக நின்ற காரணிகள், புதிதாகத்தோன்றி யுள்ள இலக்கியப் பொருட்களுடன் (content) பிறவும் அமைந்துள்ள முறை, குறிப்பிடத்தக்க இலக்கியப் படைப்பாளர், பெருமை தந்த நூல்கள், வளர்ந்துள்ள பிறதுறைகள், இருபதாம் நூற்றாண்டின் வளர்ச்சிக்குத் துணைநின்ற விதம் இன்னபிற பேசப்படுகின்றன.

அடுத்தநிலையில் பத்தொன்பதின் புலவரும் அவர்தம் படைப்புகளும் அகரவரிசைப் படுத்தப்பட்டுள்ள முறைமையைத்

தெளிவாக்கும் 'அகரவரிசை-அறிமுகம்' அமைகின்றது. முதற்கண் இலக்கிய வரிசையும் தொடர்ந்து புலவர் வரிசையும் அமைகின்றன.

இங்குத் தரப்பட்டுள்ளன மட்டுமே பத்தொன்பதின் படைப்புகளா? தந்துள்ளவை யனைத்தும் பத்தொன்பதின் பாற்படுமா எனும் வினாக்கள் இங்கு எழுவது இயல்பே. இவற்றிற்கு இல்லை; பிறவும் உளவென்பதே பதில்.

நூற்றாண்டு நிலையில் இலக்கிய வரலாறு காணும்பொழுது முன்பின் நூற்றாண்டுகளின் ஆதிக்கத்தை அறவே ஒழித்தற்கில்லை. குறிப்பிட்ட ஒரு வரையறையைத்தான் கையாள்வது என்ற வலியுறுத்தலும் அமையவில்லை. நூற்றாண்டு வரிசைக்கு வழிகாட்டிய முன்னோடிகளிடமிருந்தும் விளக்கம் பெற இயலவில்லை. பத்தொன்பதில் தமிழ்ப்பணியாற்றிய எவரும், அறிந்த வரையில், விடுபட்டுவிடல் கூடாது என்னும் ஒரே குறிக்கோளில் இந்நூல் எழுந்துள்ளது. ஆகவே முன்பின் நூற்றாண்டுகளுடன் தொடர்புடையோராகச் சுமார் ஐம்பத்து நால்வர் (மொத்தத்தில் 6 விழுக்காட்டினர்) இடம் பெற்றுள்ளனர்.

இதுபோன்ற தொகுப்புகளில் நூறு விழுக்காட்டினரும் உள்ளடங்கிய முழுமைநிலை காணல் அரிது. மற்றும் கிடைக்கும் தமிழ்ச் சுவடிகள் அனைத்தையும் நோக்கிப் பத்தொன்பதாம் நூற்றாண்டிற்குரியவற்றையும் இணைக்கும் பொழுதுதான் முழுமை பெறும் என்பதும் ஏற்புடையதே. இலங்கைத் தமிழ் உட்பட இயன்றளவு முயற்சியில் கிடைத்த தரவுகள் மட்டுமே இங்குள.

ஏறக்குறைய 873 புலவர் பெருமக்களைக் கொண்ட இந்நூற்றாண்டில் மிகமிக அருகி ஒன்பதின்மர் மட்டுமே (அசலாம்பிகை அம்மையார், ஆவுடையம்மாள், இலக்குமி அம்மாள், உலகம்மை அம்மையார், பூங்கோதையார், மனோன்மணி அம்மையார், லீலா விநோதினியம்மாள், வேம்பம்மாள்) பெண்பாற் புலவர். சுமார் 14 நூல்களையெழுதிய மனோன்மணி அம்மையார் இவர்களில் மிகுதியான நூல் படைத்தவராகக் காணப்படுகிறார். அடுத்து உலகம்மை அம்மையார் 12 நூல்கள் தந்துள்ளார். ஏனையோர் ஓரிரு நூல்கள் மட்டுமே படைத்துள்ளனர். இலட்சுமி அம்மாள் சகுந்தலை விலாசத்தின் வழி மொழிபெயர்ப்பாளராக விளங்குவது சுட்டத்தக்கது இவர்தம் நூல்கள் அனைத்தும்

சமயம் சார்ந்து மரபிலக்கியங்களாக உள. பெரும்பான்மை வெளி வந்துள்ளமையும் குறிக்கத்தக்கது.

பொது நிலையில்முன்னூற்றாண்டுகளைப்போல் பத்தொன்ப தாம் நூற்றாண்டையும் சமயமே தன் வசப்படுத்தியுள்ளது. உள், வெளிநாட்டுச் சமயங்களுக்கிடையே நிகழ்ந்த 'சமயப் பரப்புப் போராட்டம்' இதற்கு அடிப்படை. புதுமை வரவுகள் குறிப்பிடும்படி இருப்பினும் பழமையான தமிழ் மரபே தன்னாட்சி யைத் தடங்கலின்றி நிலைநாட்டியுள்ளது. புராணங்களுக்கு மிகுந்த வரவேற்பிருந்தமையை அதன் மாற்று வடிவங்களின் மிகை உணர்த்துகின்றன. புலவர் தம் ஊர் தெய்வங்கட்கு இலக்கிய ஏற்றமளித்துள்ளதையும் பரவலாகக் காணலாம். இவற்றை மீறிய நிலையில் புதுமைகள் முளைவிட்டிருப்பதும் நவிலத் தக்கது.

இந்நூல் பத்தொன்பதாம் நூற்றாண்டிலக்கியங்களுக்கான அறிமுகமேயன்றி விரிந்து பரந்த ஆய்வன்று. எனவே எந்தவொரு தனிநூலும் படைப்பாளரும் உற்று நோக்கப்படவில்லை என்பதும் உணர்த்தற்பாலது.

இவ்வாய்விற்கு மேற்பார்வையாளராக நின்று ஆய்வு சிறக்கத் தேவையான உதவிகளை நல்கி அன்புடன் வழி நடத்திய என்றும் என் வணக்கத்திற்கும் பெருமதிப்பிற்குமுரிய பேராசிரியப் பெருந் தகை, நிறுவனத்தின் மேனாள் இயக்குநர் முனைவர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் இவண் நன்றியுடன் நிறுத்தற்பாலர்.

ஆய்விற்குப் பெருந்துணையாகி பதிப்புரை நல்கிச் சிறப்பித்து, நூலாக்கத்தை நிறைவு செய்த நிறுவன இயக்குநர் (பொறுப்பு) முனைவர் அன்னிதாமசு அவர்கட்கும், நூல் வெளிவருதலைத் தொடங்கி வைத்த மேனாள் இயக்குநர் முனைவர் சிலம்பொலி சு. செல்லப்பன் அவர்கட்கும் என் மனமார்ந்த நன்றி உரித்து.

நூல் உருவாக்கத்திற்குக் களனாய் அமைந்த நூலகங்களும், நூலாசிரியரும் (பக். 81-82) இங்கே தனித்தனியே நன்றியுடன் போற்றுதற்குரியோராவர். அவர்தம் உழைப்பின்றேல் இந்நூல் வடிவுறல் அரிது. எனவே அவர்களையும் நன்றியுடன் இங்கே நினைவு கூரல் என் கடமையும் கடப்பாடும் ஆகும்.

மற்றும் அகரவரிசைத் தொகுப்பிற்கு உதவிய என் தமக்கையர் முனைவர் பரிமளா தேவேந்திரன்; முனைவர் கஸ்தூரி தயாநிதி; அச்சுப்படிகளைத் திருத்தியுதவிய தம்பி சு. சண்முக வேலாயுதம், அச்சுப்படித் திருத்தத்திற்கும் சொல்லகராதி தயாரிப்பிற்கும் உதவிய ஆய்வு மாணாக்கர் திரு. பு. பாலாஜி, திரு. ச. செயசீலன் ஆகியோரும் என் நெஞ்சார்ந்த நன்றிக்குரியோராவர்.

ஆய்வேட்டை வெளியிடுவதற்கு அனுமதியளித்த சென்னைப் பல்கலைக்கழகத்திற்கும் என் நன்றி.

இந்நூல் அச்சிடுவதில் உள்ள சிரமங்களைப் புறக்கணித்து நன்முறையில் சிறப்பாக, மிக்க பொறுப்புடனும் பொறுமையுடன் அச்சிட்டளித்துள்ள கவின்கலை அச்சக உரிமையாளர் கவிஞர் நாரா நாச்சியப்பன் அவர்கட்கும் என் இதய நன்றி.

சென்னை-113 ச. சிவகாமி
21-2-94 உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

# உள்ளே

# தமிழ் இலக்கிய வரலாற்று நிலை

மொழியின் மேன்மையை மொழிவது இலக்கிய வரலாறு. காலந்தோறும் ஒருமொழி பெறும் வளர்ச்சியைக் கணித்துரைப்பது; புலவரின் புலமைத் திறனைப் புகட்டுவது; புதிய முயற்சிகளை இனங்காட்டுவது; வளர்ச்சிக்கும் வீழ்ச்சிக்கும் காரணங் காட்டுவது; பிறமொழிகளோடு ஒப்பிட்டு நோக்கத் துணை நிற்பது; சமுதாய வரலாற்றிற்கும் வழிகாட்டுவது; முன்னைப் பழமைக்கும் பின்னைப் புதுமைக்கும் பாலமாவது......எனப் பல பெருமைகளுக்கு இடனாய இலக்கிய வரலாறு. தமிழைப் பொறுத்த வரையில் இந்நூற் றாண்டின் குறிப்பிடத்தக்க வெற்றியாகும். இலக்கியத் திறனாய்வு பல கோணங்களிலும் கொண்ட வளர்ச்சியின் பயனாகும் இது. தமிழ் இலக்கிய வரலாறு பற்றிய பொதுக் கண்ணோட்டமாக, பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கிய வரலாறு காண்பதற்குரிய வாயிலாக இவ்வியல் அமைகிறது.

## தமிழ்

உலகின் மிகப்பழமையான மொழிகளாகக் கருதப்படும் தமிழ்,[1] வடமொழி, லத்தீன், எபிரேயம், கிரீக் ஆகியவற்றுள் இன்றும் உயிர்த்துடிப்புடன் வாழும் மொழியாக உயர்வு பெறுவது தமிழ்

1. Tamil language, one of the principal Dravidian languages, spoken in South India, and perhaps the only example of an ancient classical tongue which has survived as a spoken language for more than 2500 years with its basic structure almost unchanged.

   Encyclopaedia Britannica—Vol. 21; William Benton; Chicago; 1972; p. 647.

ஒன்றே! தமிழ் என்ற சொல் இனிமையைக் குறிப்பது; பழமை காரணமாக இறைவன் படைத்த மொழி என்றும் போற்றப் படுவது. 'சந்தம் ஆர்ந்து அழகாய தண்டமிழ்' (சம்பந்தர்); 'சீர்வண்ண ஒண்டமிழ்' (திவ்வியப் பிரபந்தம்); 'பொய்யாத் தமிழ்' (சுந்தரர்); 'ஆய்ந்த முதுதமிழ்' (கல்லாடம்); 'ஞாலம் அளந்த மேன்மைத் தமிழ்' (சேக்கிழார்); 'தேனார் இன்சொல் தமிழ்' (வில்லி) எனப் பாவலரால் பாராட்டப்படும் தமிழை,

> "சொல் என்னும் பூம்போது தோற்றி, பொருள் என்னும்
> நல்இருந் தீம்தாது நாறுதலால், மல்லிகையின்
> வண்டு ஆர் கமழ் தாமம் அன்றே!"
>
> (மதுரைக்காஞ்சி, தனிப்பாடல்)

என மொழிவதில் மிகையில்லை. பிறநாட்டு மொழியியல் வல்லுநர் கூற்றுகளும் தமிழின் பழமையை, பெருமையைப் பறைசாற்று கின்றன.[2]

தமிழின் தொன்மை நூலாம் தொல்காப்பியத்தின் சிறப்புப் பாயிரம் ' வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகம்' எனத் தமிழ் — தமிழர் வாழ்ந்த எல்லையை உணர்த்து கிறது. இவ்வெல்லை தாண்டித் தமிழர் இன்று உலகெங்கிலும்

---

2. Tamil is the most highly cultivated language and possesses the richest stores of indigenous literature.
—Max Muller

It is not perhaps extra vagant to say that Tamil in its poetic form, is more polished and exact than the Greek and in both dialects with its borrowed treasure, more copious than latin in its fullness and force it resembles English and German more than any other.
—M. Winslow

Perhaps no language combines greater force with equal brevity and it may be asserted that no human speech is more close and philosophic in its expression as an exponent of the mind The sequence of things, of thought and action and its results, is always maintained inviolate, in the structure and nature of the Tamil language.......No human speech is more close and philosophic in its expression as an exponent of the mind than Tamil.
—Percival

ந. கடிகாசலம்; தமிழும் தமிழரும்; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்; சென்னை; 1982; பக். 13-15.

குறிப்பாக இலங்கை, மலேசியா, பிஜி, மௌரீசியசு, பர்மா, தாய்லாந்து, தென்கிழக்கு ஆப்பிரிக்கா போன்றவற்றில் மிகுதியாக இடங் கொண்டுள்ளனர்.

### இலக்கியம்

பல்வேறு விளக்கங்களுக்கு இடனளிப்பனவற்றுள் இலக்கியமும் ஒன்று. தொல்காப்பியரின் 'எல்லே இலக்கம்' என்பதனை அடிப்படையாகக் கொண்டு, "இலக்கு+இயம் எனப் பிரிக்கும் போது, இலக்கு என்பதற்கு விளக்கம், நோக்கம், கொள்கை, குறிக்கோள் எனப் பொருள் கொண்டு, இயம் என்பதனை ஒலிப்பது, கூறுவது, வெளிப்படுத்துவது எனப் பொருள் கொள்ளின், நம் குறிக்கோள்களையும், கொள்கைகளையும் இயம்புவது, விளக்குவது இலக்கியம் எனக் கொள்ளலாம்" எனத் தரும் விளக்கம்[3] பொருந்துகிறது.

/ உயர்ந்த நோக்கத்துடனும் சிறந்த கொள்கையுடனும் தோன்றும் இலக்கியம் நீண்ட, நிறைந்த வாழ்வு பெறுகிறது; பின்வருவனவற்றிற்கு வழிகாட்டுகிறது. காலம், சூழல், நிகழ்வுகள் சிந்தனைச் சீர்மை, கற்பனைத் திறன் இவற்றுடன் மன உந்துதலும் இலக்கியத் தோற்றத்திற்கு, சிறப்பிற்குக் களனாகின்றது. படைப்போரின் விருப்பிற்கேற்ப கருப்பொருளும், வடிவமும் அமைகின்றன. புலமைத் திறனும், காலமும், சூழலும், பிறமொழித் தாக்கமும் இவற்றிடையே மாற்றமும், வளர்ச்சியும் அமைய துணை நிற்கின்றன.)

### வரலாறு

நிகழ்ச்சிமுறை, சரித்திரம், பூர்வ சரித்திரம், சங்கதி, விபரம், உபாயம், உதாரணம் எனப் பொருள்படும் வரலாறு[4] என்பது, நடந்து முடிந்த நிகழ்வுகளையும் அவை தரும் செய்திகளையும் முறைப்படுத்தி, வருங்காலத்திற்குச் சான்றாகவும், அறிவுறுத்தலாகவும் அமைவது எனலாம். பாதுகாக்கப்பட்டுள்ள, மிகுதியும் எழுத்துச் சான்றுகளின் வழி நிகழ்ச்சிகளை மீட்டுருவாக்கம் செய்து

---

3. ச. வே. சுப்பிரமணியன்; தமிழ் இலக்கிய வகையும் வடிவம்; தமிழ்ப் பதிப்பகம்; சென்னை; 1984; பக். 7-8.
4. தமிழ்ப் பேரகராதி, தொகுதி 6; சென்னைப் பல்கலைக் கழகம்; சென்னை; 1982; ப. 3511.

வரையப்பட்டுள்ள, மனித இனத்தின் கடந்த கால அனுபவங்களை வரலாறாக அமெரிக்கக் கலைக் களஞ்சியம் குறிப்பிடுகிறது.[5]

குறிப்பிட்ட நாடு, மக்கள், காலம் மற்றும் தனிநபரின் கடந்த கால நிகழ்வுகளைக் கால வரிசையில் தொடர்ச்சியான ஒழுங்கு முறையில் அமைப்பது; எதிர்காலத்தைச் செம்மைப்படுத்தக் கூடிய நிகழ்வுகள், எண்ணங்கள், அவற்றின் விளைவுகள் முதலானவற்றைத் தொகுத்துரைப்பது என்பன போன்றும் விளக்கம் காண இயல்கின்றது.[6] இவற்றினின்றும், இறந்த காலத்தை நிகழ் காலத்தில் நினைவு கூர்ந்து எதிர்காலத்தைச் செம்மைப்படுத்தும் பணியை நிறைவேற்றும் பொறுப்பும் வரலாற்றிற்குத் தேவை என்பது புலனாகின்றது.

## இலக்கிய வரலாறு

இலக்கியத்தின், இலக்கிய வகைகளின் தோற்றம், பின்புலம், வளர்ச்சி, மாற்றம், படைப்பாளர், இலக்கிய நயம், பின் தோன்றல்களுக்கு வழிகாட்டிய நிலை எனப் பல்வேறு கூறுகளையும் உள்ளடக்கிக் கால முறைமையில் ஒழுங்குபடுத்தி தருவது இலக்கிய

---

5. History is the past experience of mankind. More exactly, history is the memory of the experience as it has been preserved, largely in written records. In the usual sense history is the product of historians work in reconstructing the flow of events from the original written traces or sources into a narrative account.

   Encyclopedia Americana Vol. 14; Americana Corporation; Newyork; 1970; p. 226.

6. History—1. The branch of knowledge dealing with past events. 2. a continuous systematic narrative of past events as relating to a particular people, country, period, person etc. usually written in chronological order. 3. The aggregate of past events. 4. The record of past events esp. in connection with the human race. 5. a past that is full of important unusual or interesting events. 6. acts, ideas, or events that will or can shape the course of the future. 7. a systematic account of any set of natural phenomena, without reference to time.

   The Random House Dictionary of the English Language; Zess Stein (ed); Random house; Newyork; 1967; p. 674.

வரலாறு. இலக்கியத்தின் வரலாற்றை மட்டுமின்றி அதனைப் படைத்தவரின் வரலாற்றையும் வரையறுப்பதால் இலக்கிய வரலாறு இரட்டைப் பயனுடையதாய்ப் பிற வரலாறுகளினின்றும் உயர்வு பெறுகிறது. இலக்கிய நயம் காண்பதன் வழித் திறனாய்வுத் துறையும், புலவோர் வரலாறு நல்குவதன் வழி வாழ்க்கை வரலாற்றியலும் இதனுடன் நெருங்கிய தொடர்பு கொள்கின்றன. வரலாற்று மாந்தர் புரவலராகவும், கதைத் தலைவராகவும் இலக்கிய இணைவு கொள்வதன் மூலம் அரசியல், வரலாற்றுத் துறைகளும் குறிப்பிடத்தக்க சிறப்பு பெறுகின்றன. காலங் காட்டல், விளைவு சுட்டல், சமுதாய நிலை கூறல் எனும் வரலாற்றுத் துறையின் சிறப்பியல்புகள் இதனுள்ளும் ஏற்றம் பெறு கின்றன. குறிப்பிட்ட இனத்தின் வாழ்க்கை நெறி, நம்பிக்கை கள், பழக்க வழக்கங்கள் முதலானவற்றை மொழிவதன் மூலம் சமுதாயவியலோடும் உறவு கொள்கிறது.

இவ்வாறு பன்முகங் காட்டும் இலக்கிய வரலாற்றினை. "ஒரு மொழியின் இலக்கிய வரலாறானது அம்மொழியிலுள்ள செவ்விய நூல்களின் தோற்றத்தையும் தன்மையையுங் காலமுறைக்கேற்ப வகுத்துக்காட்டி, அம்மொழி பேசும் மக்களது கருத்துக்கள் இலக்கியங்களுள் எம்முறையிலமைந்துள்ளனவென்றும் அவர்களது மனவாழ்க்கையின் வரலாற்றினை அவர்கள் இலக்கியங்கள் எவ்வாறு விளக்கிக் காட்டுகின்றன என்றுந் தெரிந்து, இலக்கிய மென்பது மக்கள் வாழ்க்கைப் பாடம் என்று தெளிவுற அறிவுறுத்துங் கருவி நூலாகும்'' என்று இயம்பியிருப்பதும்[7] சுட்டத் தக்கது.

### இலக்கிய வரலாற்றியல்பு

தலைசிறந்த இலக்கிய வரலாறு என்பது எப்படி அமைய வேண்டும் என இலக்கிய வரலாற்றாசிரியர் பலர் நவின்றுள்ளனர்.

"இலக்கிய வரலாறு சிறந்த முறையில் அமைய வேண்டு மாயின், முதலில் நூலாசிரியர்கள் நிலவிய காலங்களைச் சமயச் சார்பு பற்றி நடுவுநிலைமை திறம்பாமல் உண்மையை உணரும் உயர்ந்த குறிக்கோள்களுடன் ஆராய்ந்து வரையறை செய்வது இன்றியமையாததாகும். நூல்களில் கிடைக்கும் அகச்சான்று

---

7. கா. சுப்பிரமணிய பிள்ளை; இலக்கிய வரலாறு-1; ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம்; சென்னை; ஆ.ப. 1970, முன்னுரை.

களையும் மதிப்பிற்குரிய புறச்சான்றுகளையும் தக்க ஆதாரங் களாகக் கொள்வதோடு ஆதாரமற்ற கற்பனைச் செய்திகளை முற்றிலும் விலக்குதலும் வேண்டும்.''[8]

''தமிழிலக்கிய வரலாறென்றால் இவற்றிற்கு (இயற்கை, அரசியல், அறிவியல், பழக்கவழக்கம், பண்பாடு) ஏற்பத் தமிழ் இலக்கியம் மாறி வருவதைக் கூறி வருவதாக இருக்க வேண்டும். ஆனால் தமிழிலக்கியங்களைத் தனித்தனி இலக்கியங்களாக ஆராய்ந்தால், அது தமிழிலக்கிய வரலாறு ஆகாது. இந்தத் தனி இலக்கியங்களிடையே ஓர் ஒற்றுமை காண வேண்டும்......இப்படிக் காலவரையறை செய்த பின்னர்தான் தமிழ் இலக்கிய வரலாறு எழுத முடியும். ஆனால் இலக்கிய வரலாற்றை எழுதும்போது இடையிடையே இத்தகைய ஆராய்ச்சிகள் (கட்டுக்கதைகள், பெயர்க் குழப்பம், வரலாறு) வருமானால் இலக்கியச் சுவை குன்றும். எனவே இவ்வாராய்ச்சியைப் பின்னிணைப்பாகச் சேர்ப்பதே நலம் எனத் தோன்றுகிறது.''[9]

''தமிழ் இலக்கிய வரலாறு ஆராய முற்படும்போது நாட்டின் சரித்திரமும், சமயத்தின் வரலாறும், மொழியின் வரலாறும் அறிந்தால்தான் இலக்கிய வரலாற்றில் உண்மையைக் காண முடியும்.''[10]

''இலக்கிய வரலாறு என்பது. ஒரு சமுதாயத்தின் வரலாற்றை அதன் இலக்கியங்களைக் கொண்டு, அதன் இலக்கியங்களின் அடி நாதங்கள், வெளிப்பாடுகள், தாக்கங்கள் ஆகியன கொண்டு எடுத்துக் கூறுவதாகும்.''[11]

இவற்றை ஒருங்கிணைத்தும் இதுவரை தமிழில் தோன்றியுள்ள இலக்கிய வரலாறுகளைக் கருத்திற் கொண்டும் நோக்கும்போது

8. தி. வை. சதாசிவ பண்டாரத்தார்; தமிழ் இலக்கிய வரலாறு (13. 14. 15ஆம் நூற்றாண்டுகள்); அண்ணா மலைப் பல்கலைக்கழகம்; அண்ணாமலை நகர்; நா. ப. 1977; முன்னுரை.
9. தெ பொ. மீனாட்சி சுந்தரனார்; தமிழ் இலக்கிய வரலாறு (சங்க காலம்); சர்வோதய இலக்கியப் பண்ணை; மதுரை; 1981, பக். 19-25.
10. மு. அருணாசலம்; தமிழ் இலக்கிய வரலாறு (பதினோராம் நூற்றாண்டு); காந்தி வித்யாலயம்; மாயூரம்; 1971; ப. x.
11. கார்த்திகேசு சிவத்தம்பி; தமிழில் இலக்கிய வரலாறு (வரலாறெழுதியல் ஆய்வு); நியூசெஞ்சுரி புக் ஹவுஸ்; சென்னை; மு.ப. மார்ச், 1988; ப. xi.

இலக்கிய வரலாற்றின் இயல்புகளாக, கொள்கைகளாகக் கீழ்வருவன இடம் பெறுகின்றன.

1. வரலாறு என்ற நிலையில் காலக்குறிப்பு மிகத் தேவையா கின்றது. தமிழ் இலக்கியங்களைப் பொறுத்தளவில் இலக்கிய வரலாறு எழுதுவதில் எழும் மிகப் பெரிய சிக்கலாக இஃதமை கின்றது. காலவரையறை செய்ய இயலாதும், ஒன்றிற்கு மேற் பட்ட (கணிப்பு) கருத்துடையதாகவும் பல்வேறு இலக்கியங்கள் நிற்றல் வெள்ளிடை மலை. அக, புறச் சான்றுகள் வழி வரை யறுப்பதற்குத் தடைசெய்வனவாய், இடைக்காலத்தே பல்கிப் பெருகியுள்ள புலவர் பற்றிய கட்டுக்கதைகளும், ஒரே பெயரில் பலர் இருப்பதும், படைப்பாளர் அறிய இயலா படைப்புகளும், காலக் குறிப்பில் தொடர்புடையோர் அக்கறை காட்டாததும் அமைகின்றன. எனவே தீர்க்க இயலாத சிக்கலாகவும் தோன்று கின்றது. இருபது நூற்றாண்டுகட்கு மேலான இலக்கிய காலப் பழமை இதற்கு முதன்மைக் காரணங்களுள் ஒன்றாகிறது.

2. தமிழ் இலக்கியங்களின் பெரும்பகுதி சமயஞ் சார்ந்தும், சமயத் தொடர்புடையனவாகவும், சமயப் பின்புலத்துடனும் அமைகின்றன. தமிழ் மொழியைப் பக்தி மொழியாகப் பகர்வதும் இவண் எண்ணத்தக்கது.[12] ஆகவே சமய வரலாறு அறிதல், காட்டுதல் என்பதும் இன்றியமையாததாகின்றது.

3. இலக்கியத் தோற்றத்திலும் மாற்றத்திலும் அரசியலும், சமுதாயமும் இயக்கங்களும் சிறப்பான பங்கேற்கின்றனவாதலின் அவ்வக்கால அரசியலையும், சமுதாய நிலையையும் இயக்கங்களை யும் விளக்குதல் சிறப்புறுகின்றது. இத்துடன் அவ்விலக்கியங்களி லிருந்து பெறும் அரசியல், சமூகநிலை, வரலாறு முதலானவற்றைத் தெளிவாக விளக்குதலும் தேவை. சமூகவியல் கல்விக்குப் இப்பகுதி பெருந்துணையாகும். கல்வெட்டுகள், மெய்க்கீர்த்திகள், செப்பேடுகள் போன்றவற்றுடன் ஒப்புநோக்கி உண்மை காணற்கும் உதவும்.

---

12. If Latin is the language of the law, Hebrew the language of ethical religion, Sanskrit the language of Philosophy, English, French and German are the languages of Sciences, Tamil is the language of poetry of divine experience—Prof. T. P. Meenakshi Sundaram, ந. கடிகாசலம்; முன்சுட்டியது; ப. 15.

4. இலக்கிய ஆசிரியரின் வரலாற்றை வரிவாகப் புரவலர் பற்றிய விளக்கங்களுடன் அறிவுறுத்துவதும் நன்மை பயக்கும். குறிப்பிட்ட இலக்கியத்தின் தோற்றத்திற்கு, சிறப்பிற்கு சிறப்பின்மைக்குக் காரணம் தேரத் துணையாகும். இதற்கு அக, புறச் சான்றுகளை மிகக் கவனமாக ஆய்ந்து, உண்மைக்கு முரணாகா வகையில் கற்பனை களைந்து, தெளிவாக இயம்ப வேண்டும். முற்றிலும் கற்பனையாக அமைந்த கட்டுக்கதைகளை முழுமையாகப் புறக்கணித்தல் வேண்டும். இலக்கியத்தால் ஆசிரியர் பெற்ற பயனை, பெருமையை மொழிவதும் வேண்டற் பாற்று.

5. குறிப்பிட்ட இலக்கியப் படைப்பின் நோக்கம், வகை வடிவம், பொருள், கையாண்டுள்ள உத்திகள், முன்னவரிடம் பெற்றுக் கொண்டவை, பின்னவர்க்கு வழங்கிய கொடை; தமிழ் பெற்ற சிறப்பு, பிறவற்றோடு வேறுபடு நிலை, முன்னேறிய நிலை, இலக்கிய நயம், தனித்துவம் முதலானவற்றுடன் எழுச்சிக்குரிய காரணங்களையும் சூழலையும் உணர்த்தும் இப்பகுதி இலக்கிய வரலாற்றில் முதன்மைச் சிறப்பைப் பெறுகிறது இப்பணியில் இலக்கிய வரலாற்றாசிரியன் நடுநிலை தவறாதானாக, 'நமரெனக் கோல் கோடாது, பிறரெனக் குணங்கொல்லாது' (புறம் 55) சான்றாண்மையுடன் செயல்படல் மிக மிக இன்றியமையாதது. சமய, இன, இட, கொள்கை, பொருள், இயக்கம் போன்றவற்றின் வேறுபாட்டினால் தன் விருப்பு வெறுப்புகளைப் புலப்படுத்தாது நேர்மையுடன் செயல்படலை இலக்கிய வரலாற்றாசிரியரினின் தகுதிகளுள் ஒன்றாக வரையறுப்பது பொருந்தும்.

6. சுமார் இரண்டாயிரமாண்டு வரலாற்றையுடைய தமிழ் இலக்கியப் பரப்பு பல்வேறு காரணங்களால் பல்வேறு கோணங் களில் பல்கிப் பெருகியுள்ளமை வெள்ளிடை மலை. காலந்தோறும் இடையறாது வளர்ந்து வளம் பெற்றுள்ள தமிழ் இலக்கியக் கடலை ஒரு குறிப்பிட்ட வரையறைக்குள் அடக்குதல் எளிதன்று. எனவே காலம், ஆசிரியர், இலக்கிய வகை, வடிவம், பொருள் என்பன வற்றுள் எதனை முதன்மைப் படுத்தி இலக்கிய வரலாறு படைப்பது எனும் வினாவிற்கு விடை காண்பது அரிதாகின்றது. எதனை முதன்மைப் படுத்தினும் முறைகளும் குறைகளும் தென்படுகின்றன. இவற்றை விரிப்பின் பெருகுமாதலின் இங்குச் சுட்டுதலுடன் அமைகிறது.

வரலாற்றியலுக்கும் காலக்கூறு இன்றியமையாதது ஆதலின், அறிந்தவரையில் அதற்கு முதன்மையளித்து, இலக்கிய வகைகளின் அடிப்படையில், ஆசிரியர், பொருள் முதலானவற்றிற்கும் ஏற்ற இடமளித்து அமைத்தல் ஏற்புடையதாகத் தோன்றுகின்றது. ஒன்றோ, பலவோ இலக்கியம படைத்து அதன் வழித் தனிச் சிறப்புறும் புலவரைத் தனித்து நோக்கிச் சிறப்பித்தல் வேண்டற் பாற்று. தமிழிலக்கிய வரலாற்றிற்குப் பன்முக நோக்கே, முழுமையாக வெளிப்படுத்தற்கு மிதந்த வாய்ப்பளிக்கிறது.

7. இலக்கிய வரலாற்றை முதலிருந்து தொடங்கி அடிக்கு வருவதா அல்லது அடியிலிருந்து தொடங்கி முதலுக்கு வருவதா என்ற வினாவிற்கு அறிஞர் இரண்டாமதைத் தேர்கின்றார். அதற்குக் காரணமாக, "இன்றைய நிலை எவ்வாறு வளர்ந்தது என அறிவதில் தானே நமக்குச் சுவை இருக்கின்றது. பழங்கதையைக் கூறிவரும்போது நம்முடைய புதுக்கதையை மறந்து விடுவோம். எனவே நம்முடைய நிலையிலேயிருந்து தொடங்கிச் சிறிது சிறிதாகப் பின சென்று நம்நிலை முன்னெல்லாம் எப்படியிருந்தது என விளக்கமாக அறிந்து கொண்டு தொடக்கத்திற்குச் செல்வது தான் பொருத்தம்" என்பர்.[13] இக்கூற்றுப் பொருந்துமாறு இல்லை. நம் இலக்கியப் பரப்பும், படைப்பும், படைப்புச் சூழலும இம்முறைக்கு ஏற்புடையதாக இல்லை என்பதுடன் வரலாறு என்பது எப்பொழுதும் முதலிலிருந்து முடிவை நோக்கிச் செல்லவது என்பதும் உணர்த்தத்தக்கது.

8. இலக்கிய வரலாறு என்பது வெறுமனே இலக்கியங்கள் பற்றிய தொகுப்புரையாக அமையாது, அதனோடு தொடர்புடைய இலக்கணம், நிகண்டு, அகராதி, உரை, உரையாசிரியர் மற்றும் இலக்கிய எழுச்சிக்குப் பின்புலமாக அமையும் புரவலர், இயக்கங்கள், மடம் போன்ற அனைத்துக் கூறுகளையும் உள்ளடக்கியதாய் வரைதல் வேண்டத்தக்கது. குறிப்பிட்ட கால, இலக்கிய வகைகளின் வளர்ச்சி, மாற்றம், வீழ்ச்சி போன்றவற்றின் காரணங்களையும் தெளிவுபடுத்தலும் தேவையாகும்.

"இலக்கிய வரலாறு எனக் கூறும்பொழுது இலக்கியத்தின் வரலாறு, இலக்கியம் தோன்றிய வரலாறு. இலக்கியம் எழுந்த கால வரலாறு, இலக்கியம் முகிழ்த்த சமுதாயச் சூழல் வரலாறு எனப் பல கோணங்கள் விரிகின்றன...... ..இலக்கிய வரலாறு இலக்கிய

13. தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்; முன்கட்டியது; ப. 25.

நோக்க நிறைவேற்றப் பாங்கையும் இயம்புதல் தேவை. இலக்கிய இயக்க (Literary Movements) வரலாறாகவும் இது தெளிவுபட்டுப் பொருந்த முடியும்,'' என்ற கூற்றும் இவண் இணைத்து நோக்கத் தக்கது.[14]

மேற்காட்டிய இயல்புக் கூறுகள் அனைத்தும் இயன்றளவு இணைந்து செயல்பட வரையப்படும் இலக்கிய வரலாறு முதன்மை பெற்றுத் தமிழ் இலக்கிய வளத்தை, உண்மைப் புகழை உலகிற்கு உணர்த்துவதில் முன்னிற்கும் என்பதில் ஐயமில்லை.

**இலக்கிய வரலாற்றின் பயன்**

1. மொழியின் வரலாற்றை, வளத்தை உள்ளங்கை நெல்லிக் கனி ஆக்குவது.

2. மொழியின் சிறப்பினை அறுதியிடற்கு அதனுள் தோன்றி யுள்ள இலக்கியங்கள் பெரிதும் துணை நிற்றலின் இலக்கிய வரலாறு வேண்டப்படுகிறது.

3. உலக மொழிகளோடு ஒப்பு நோக்குதற்கு இன்றி யமையாதது.

4. ஒப்பியல், திறனாய்வு, மொழியியல் போன்றவற்றிற்கு அடிப்படைத் தேவையாவது. சமயம், வரலாறு, சமூகவியல் முதலானவற்றிற்குத் துணை நிற்பது.

5. காலம், படைப்பாளர், பொருள் எனப் பலவற்றில் பலவாறாகத் தோன்றும் ஐயங்களுக்கு, மயக்கங்களுக்கு விடையும் தெளிவும் பெற வழிவகுப்பது.

6. படைப்பாளரின், படைப்பின் தனித்துவத்தை அறிந்து கொள்ள உதவுவது.

7. காலக் குறிப்பிற்கு, கணிப்பிற்குச் சிறப்பு நல்குதலின், ''கால ஆராய்ச்சி நிறைவு பெற்றால்தான், சொல்லாராய்ச்சியும், மொழியாராய்ச்சியும், இலக்கிய ஆராய்ச்சியும் உண்மைப் பொருளுடையதாய் அமையும்'' என்ற கருத்து[15] இலக்கிய வரலாற்றின் பயனைச் சுட்டக் காணலாம்.

---

14. ச. வே. சுப்பிரமணியன்; இலக்கியக் கொள்கை-தொகுதி 8; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்; சென்னை; 1983; பக். 4-7.
15. மு. அருணாசலம்; முன்சுட்டியது; ப. xvi.

8. "கால வரலாறும் கலைஞன் வரலாறும் (Historical, Biographical) படைப்பின் தோற்ற வரலாறும் இலக்கியத்தின் திறனை முழுமையாகப் புரிந்து கொள்வதற்கு உதவும் என்பதை 'நாமார்க்கும் குடி அல்லோம்' எனப் பாடிய அப்பரின் தேவாரம் வழியும் உணர்த்தலாம்" என்ற கூற்று[16] படைப்பினை முழுமை யாகப் புரிந்து கொள்வதற்கும், அதன் நோக்கத்தை நிறைவேற்று வதற்கும் இலக்கிய வரலாறுகள் முன்னிற்பதை உணர்த்துகிறது.

9. தொட்டனைத்தூறும் மணற்கேணியாய், நவில்தொறும் நூல்நயம் காண்பதற்கு ஓர் கருவியாகவும் இலக்கிய வரலாறுகள் அமைகின்றன. பரந்துபட்ட இலக்கியப் பரப்பை ஒரு வரை யறைக்குள் அடக்குதல்; போதுமானவளவு இலக்கியங்களை அறிமுகப்படுத்துதல், மறைந்து கிடப்பனவற்றை வெளிப் படுத்துதல்; புதுமைகளைப் போற்றுதல் எனப் பன்முக நோக்கிலும் இவை சிறப்புறுகின்றன.

10. தமிழைப் பொறுத்த வரையில் மறைந்து போன ஏராள மான இலக்கண, இலக்கிய, கலை நூல்களை அறிந்து கொள்ளவும்; செல்வாக்கிழந்து பயிற்சி குன்றியிருந்தவற்றில் உண்மையில் பெருமைக்குரியன மீண்டும் புத்துயிர் பெறவும்; போலிகளை இனங் காணவும்; மூலவர்களை முதன்மைப்படுத்தவும் இலக்கிய வரலாறு கள் பெருந்தொண்டாற்றியுள்ளன.

11. புகழ் பெற்ற படைப்பாளரின் தகுதியை, இலக்கிய வரலாற்றில் அவர்க்குள்ள இடத்தை உறுதிப்படுத்தவும் இவை உதவுகின்றன. சுருங்கக் கூறின், "காலந்தோறும் சூழ்நிலைக்குத் தக இலக்கியங்கள் பல்வேறு நிலைகளில் வேறுபட்டு வருகின்றன; வளருகின்றன, எனவே அதனை உணர்ந்து அறிந்து தெளிந்து கொள்ள இலக்கிய வரலாறு மிக இன்றியமையாதது" ஆகும்.[17]

இன்னும் ஆழ்ந்து நோக்கின் மற்றும் பல பயன்களைப் பெறுதற்கு வாய்ப்புண்டு.

## இலக்கிய வரலாற்றாசிரியர்

இலககிய வரலாற்றாசிரியர்க்குரிய இயல்புகளாக வேண்டப் படுவன இவண் கருதப்படுகின்றன. இதுவரை எழுந்துள்ள படைப்புகளில் ஆழ்ந்த புலமை; இலககிய வரலாற்றோடு தொடர்

---

16. ச. வே. சுப்பிரமணியன்; முன்சுட்டியது; ப. 17.
17. மேற்படி; ப. 3.

புடைய துறைகளிலும் பயிற்சி; நுணுகிப் பார்க்கும் திறன்; அறிந்தவற்றைத் தெளிவாக உணர்த்தும் தேர்ச்சி இவற்றோடு ஓரஞ் சாராது நடுநிலையுடன் மொழிதல் மிகத் தேவையான அடிப்படை இயல்புகளாக அமைகின்றன.

வரலாற்றாசிரியருக்குத் தேவை என மேனாட்டார் வரையறுக்கும் சில கூறுகளும் இலக்கிய வரலாற்றாசிரியருக்குப் பொருத்தமுற அமைகின்றன. 1. மூலங்களை, உண்மைகளைத் தன் முயற்சியில் காணத் துடித்தல். 2. அவ்வப்போது தோன்றும் புதிய விளக்கங்களை விடாது இறுதிவரை நன்கு அறிந்திருத்தல், 3. புதிய புதிய கோணங்களில் நுணுகி ஆய்தல், 4. எழுத்துக்கலை வல்லமை எனும் நான்கினைப் பிரிட்டானிய கலைக்களஞ்சியம்[18] வரலாற்றாசிரியர்க்கு உரித்தாக்குகின்றது. இவர்களை அறிவியலறிஞரோடும் கலைஞரோடும் ஒப்ப நோக்கிச் சிறப்பிக்கின்றது அமெரிக்கக் கலைக்களஞ்சியம்.[19]

---

18. The four facts are heuristic, knowledge of current interpretation, research and writing. The first two may be briefly considered.

    Heuristic has been adopted as a convenient term for the technique of investigation that can be acquired solely by practice and experience. In the case of the historian it embraces such things as knowledge of manuscript collections methods of card indexing and classifying material and knowledge of bibliography. It underlies other aspects of methodology as in knowledge of the capabilities of historians working in the same and similar fields or in the power of dealing expeditiously with documentary material. The necessity for knowledge of current interpretation is based on the working principles that inquiry proceeds from the known to the unknown and the historian has to be well acquainted with existing work in his own field, incontiguous historical fields and in allied disciplines. The work in each case consists both fact and interpretation and the amount the historian accepts will vary.
    Encyclopaedia Britannica—Vol. 11; p. 541.

19. The historian must command the fools of analysis to assess the truth in his source materials, and of synthesis to assemble and interpret these materials in a meaningful narrative. As a scientist, a historian

தமிழ் இலக்கிய வரலாற்றாசிரியருக்கு இவற்றுடன் கல்வெட்டியல், சுவடியியல், மெய்க்கீர்த்திகள் ஆகியவற்றிலும் தெளிந்த அறிவு தேவைப்படுகின்றது. இலக்கியத்துள் இடம் பெற்றுள்ள விளங்காத வரலாற்றுக் குறிப்புகளை விளங்கிக் கொள்ளவும், சமுதாயத்தை வெளிப்படுத்துவதில் உள்ள முரண் அல்லது மிகையைப் புரிந்து கொள்வதற்கும் கல்வெட்டுகள், மெய்க் கீர்த்திகள் பயன்படுகின்றன. நீண்ட நெடுங்கால வரலாற்றுச் சிறப்புடைய தமிழிலக்கியம் அன்று ஏட்டுச் சுவடிகளில்தான் அடைக்கலமாகியிருந்தது. இன்றும் பல இலக்கிய இலக்கணங்கள் சுவடிகளில் பொதிந்துள்ளன. அவை வெளிவருதற்கும், அறிதற்கும் வரலாற்றாசிரியருக்குச் சுவடிக்கல்வி இன்றியமையாததாகிறது. சுவடிகளில் இருப்பனவற்றையும் இணைத்து வரும் இலக்கிய வரலாறே முழுமை பெற்ற வரலாறாகும்.

## இலக்கிய வரலாற்றின் தோற்றுவாய்

இலக்கியங்களுக்கு வரலாறு தேவை என்ற உணர்வு தமிழில் முதன் முதலாக இறையனார் அகப்பொருள் எனும் களவியலுரை யாசிரியருக்குத் தோன்றியுள்ளதாகத் தோன்றுகிறது. இந்நூலின் முதல் நூற்பாவிற்கு உரை வரையுங்கால் நவின்றுள்ள 'முச்சங்க வரலாறு', 'களவியலின் வரலாறு', 'களவியல் உரை கண்டமை' ஆகிய பகுதிகள் இவ்வெண்ணத்தைத் தருகின்றன. கி.பி. 8ஆம் நூற்றாண்டினதாகக் கருதப்படும் இவ்வுரையாசிரியரின் பெயர் முதலிய விளக்கங்கள் அறியுமாறு இல்லை.

உலகளாவிய நிலையில் முதற்கண் இலக்கிய வரலாறுகள் நூற்றொகைகளாக உருவெடுத்தன; இம்முயற்சி கி. பி. 16, 18ஆம் நூற்றாண்டுகளில் நிகழ்ந்ததாக அறிய முடிகிறது.[20] இலக்கிய

---

must hare a critical frame of mind as well as training in the location and use of sources. As an artist, ne needs literary skill and the imagination to perceive broad and complex relationships. Encyclopedia Americana; p. 226.

20. In a very simple way historical method began to find an entrance into literary study through early modern attempt at writing literary chronicle early nationalistic inclinations to look back over certain centuries and to cataloque authors, manuscripts, or printed books, as in the bibliographies of English literature compiled by Leland, C. 1545, Baje

வரலாற்றுச் சிந்தனை தமிழில் கி. பி. எட்டில் கால் கொள, செயலாக்கம் மேலும் பத்து நூற்றாண்டுகளைக் கடக்க வேண்டிய தாயிற்று. 'The Tamil Plutarch' எனும் ஆங்கில நூல் சைமன் காசி செட்டியால் 1859இல் எழுதப்பட்டுத் தமிழிலக்கிய வரலாற்றிற்குத் தோற்றுவாயாக அமைகிறது. ஆசிரியர் அகர வரிசையோ, காலவரையறையோயின்றி, ஆசிரியர் நூலை யாத்துள்ளார். முதல் முயற்சி என்ற பாராட்டுடன், ஆய்வு நோக்கின்றி வழக்குக் கதைகளின் அடிப்படையில் நூல் அமைந்துள்ள குறையும் சுட்டத் தக்கது. இக்குறை இன்றளவும் இலக்கிய வரலாறுகளில் தொடர்வது கடியப்பட வேண்டியதாகும். 1946இல் இந்நூலுள் காணப்படும் குறைகள் பலவற்றை, 'Note' எனும் பகுதியில் திருத்தம் செய்து தெ. பொ. மீனாட்சி சுந்தரனார் தந்துள்ளார்.

தொடர்ந்து, ஜான்மர்டாக் 1865இல் ஆங்கிலம், தமிழ் இருமொழிக் கலப்பில் 'Classified Catalogue of Tamil Printed Books' எனும் நூற்றொகையை வழங்கியுள்ளார். 1855இல் எழுதத் துவங்கி 1876இல் நூலாக்கம் பெற்ற வீராசாமி செட்டியாரின் 'விநோதரச மஞ்சரி'யில் இலக்கிய வரலாற்றுக் கூறுகள் இடம் பெறக் காண்கிறோம். மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையின் 'Some milestones in the history of Tamil literature or the age of Tirujnana Sambandha' (1891), ஜே. ஆர். அர்னால்டின் 'பாவலர் சரித்திர தீபகம்' (1886) ஆகிய நூல்களும் 19ஆம் நூற்றாண்டின் இறுதியில் முழுமையான தமிழிலக்கிய வரலாறு தேவை என்ற உணர்வுத் தமிழறிஞரிடையே நிறைந்திருந் தமையைக் காட்டுகின்றன. தி. செல்வக் கேசவராய முதலியார் 1896இல் எழுதி வெளியிட்டுள்ள 'தமிழும் தமிழரும்' எனும் நூலுள், நூல் அகராதி, ஆசிரியர் அகராதி ஆகியன அமைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது.[21]

---

1548 and 1557, Tanner 1748 or Mackenzie 1708-22. William K., Wimsatt, Jn; & Cleanth Brooks; Literary Criticism A Short History; Oxford & IBH Publishing Co., New Delhi; 1970; p. 523.

21. தமிழ் வளர்ச்சிக் கழகம் 1968இல் ஜான் மர்டாக்கின் 'Classified Catalogue of Tamil Printed Books' நூலை மறுபதிப்பு செய்துள்ளதில் இப்பகுதிகள் பின்னிணைப்பாக இணைந்துள்ளன.

இம்முயற்சி இந்நூற்றாண்டிலும் தொடர்ந்து வளர்ந்து தமிழிலக்கிய வரலாற்றின் வரலாற்றில் பல அரிய நூல்களை வெளிக்கொணர்ந்துள்ளது.[22]

**தமிழ் இலக்கிய வரலாறுகள்**

இதுவரை தமிழில் எழுந்துள்ள இலக்கிய வரலாறுகளை நோக்கும்பொழுது அவை புறவமைப்பில் முழுநிலை, பகுதிநிலை எனும் இரு பெரும் பிரிவுகளின் கீழ் அமைகின்றன, அவற்றின் இயல்பிற்கேற்ப அகவமைப்பும் மாறுபட்டு அமைகின்றது.

முழுநிலை: தொல்காப்பியம் முதலாக இன்றைய படைப் பாளர்கள் ஈறாக உள்ளடங்கிய தமிழ் இலக்கிய வரலாறுகள் இதனுள் அடங்கும். தொடக்க காலத்தில் தமிழில் எழுந்த வரலாறுகளுள் கா. சு. பிள்ளையின் முயற்சி குறிப்பிடத்தக்கது.

---

22. எம். எஸ். பூர்ணலிங்கம் பிள்ளை—Tamil Literature 1904
கா. சுப்பிரமணிய பிள்ளை—தமிழ் இலக்கிய வரலாறு 1930
சுன்னாகம் குமாரசுவாமிப்புலவர் — தமிழ்ப்புலவர் சரித்திரம்
சபாபதி நாவலர்—திராவிடப் பிரகாசிகை
மயிலை சீனி. வேங்கடசாமி—கிறித்தவமும் தமிழும்— 1936, பௌத்தமும் தமிழும் 1940, சமணமும் தமிழும் 1954, மறைந்து போன தமிழ் நூல்கள் 1959.
தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் — தமிழ் இலக்கிய வரலாறு—13, 14, 15ஆம் நூற்றாண்டுகள்
சோமசுந்தர தேசிகர்—தமிழ் இலக்கிய வரலாறு 16, 17ஆம் நூற்றாண்டுகள் 1936-1937
மு. இராகவையங்கார் —சாசனத் தமிழ்க்கவி சரிதம்
தெ. பொ. மீனாட்சி சுந்தரனார்—A plea for a history of Tamil Thought 1951
எஸ். வையாபுரிப் பிள்ளை—History of Tamil Language and Literature upto A.D. 1000, 1957
இராசமாணிக்கனார்—கால ஆராய்ச்சி—1957
மு. அருணாசலம்—தமிழ் இலக்கிய வரலாறு—நூற்றாண்டு வரிசை 9 முதல் 16 வரை, 1969—
ஆ. வேலுப்பிள்ளை — தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும் 1969
மு. வரதராசனார்—தமிழ் இலக்கிய வரலாறு, 1972
ச. வே. சுப்பிரமணியன்—தமிழ் இலக்கிய வகையும் வடிவம் 1984
மது. ச. விமலானந்தம்—தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் 1987.

வளர்ச்சி பெற்ற நிலையில் தமிழ் இலக்கியத்தில் காலமும் கருத்தும் (ஆ. வேலுப்பிள்ளை); தமிழ் இலக்கிய வகையும் வடிவும் (ச. வே. சுப்பிரமணியன்), தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம் (மது. ச. விமலானந்தன்) ஆகிய மூன்று நூல்கள் சுட்டத்தக்கன.

இலக்கியங்களுக்கிடையே காலந்தோறும் ஏற்பட்ட மாற்றத்தை, வளர்ச்சியைக் கருப்பொருள் நோக்கில் சமுதாயப் பின்புலத்தை அடிப்படையாகக் கொண்டு எழுந்தது முதல் நூல். இலக்கிய வரலாற்றுப் போக்கில் புதிய கோணத்தைக் காட்டிய பெருமையுடையது இந்நூல். பாட்டியல்கள் கூறும் தொன்னூற்றாறு என்ற வரையறையை மீறி முந்நூற்றிற்கும் மேற்பட்ட நிலையில் வளர்ந்துள்ள தமிழ் இலக்கிய வகைகளின் அடிப்படையில், முழுமையான ஆய்வுக் கண்ணோட்டத்தோடு ஒவ்வொன்றின் தனிச் சிறப்புகளையும் அறுதியிட்டுரைக்கும் ஆய்வுரையாகத் (Distinctive feature analysis) தமிழ் இலக்கிய வகையும் வடிவும் நூல் அமைந்துள்ளது. மற்றும் இலக்கிய வகைகளின் அடிப்படையாய் பொருண்மைக்கும் யாப்பிற்கும் சிறப்பளித்து வரையப்பட்ட முதல் நூல் எனும் பெருமைக்குரியதாகிறது. "புதிய நோக்கில் எழுதப் படும் இலக்கிய வரலாறு மேன்மேலும் புதிய உண்மைகளைக் கண்டறியத்தக்க, புதிய விளக்கங்களைக் கண்டறியத்தக்க, புதிய விளக்கங்களை அளிக்கவல்ல சுவையான ஆர்வத்தைத் தோற்றுவிக்கும் அரிய வரலாறாகும் என்பது உறுதி. இலக்கியத்தின் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய, அது விரித்துரைக்கும் இலக்கிய உருவாக்கம் பற்றிய வரலாறு அது. அடிக்கருத்துப் பல்குதல், யாப்பு வடிவம் வளர்தல், திறனுத்திகள் கிளைத்தல் என இவையனைத்தும் உள்ளடங்கிய வரலாறு அது. காலப்பகுதி, இயக்கம், வகைமை என்ற நோக்கில் தொகுதிகளாகவும் அவற்றின் பகுதிகளாகவும் எடுத்துக் கொண்டு, படிமுறை வளர்ச்சி வரலாற்றைப் படைப்பது இலக்கியத்தின் பண்புச் சிறப்பை, உருவநலத்தை உயிரொளியை வெளிப்படுத்தும்" எனும் கருத்தினை[23] உறுதிப் படுவதாக இந்நூல் மலர்ந்துள்ளது.

அறிவியலின் வளர்ச்சி இலக்கியத்திலும் படர்ந்துள்ளது. புதிய பாதைகள் பல அவ்வப்போது தோன்றி தமிழ் இலக்கிய வளர்ச்சியில் இடம் பெறுகின்றன. அரசு, தனியார் நிறுவனங்களும், கழகங்

23. தமிழண்ணல்; புதிய நோக்கில் தமிழ் இலக்கிய வரலாறு; மீனாட்சி புத்தக நிலையம்; மதுரை; 1987; ப. 12.

களும் பொதுமக்களிடம் தமிழை அழைத்துச் சென்றுள்ளனர். வளங்காணும் ஆய்வரங்கங்களும் பலவாகப் பல்கியுள்ளன. பிற துறைகளிலும் தமிழ் வளம் பெற்றுள்ளதோடு. பிற துறைகளோடு இணைத்து ஆய்வு செய்யும் போக்கும் வளர்ந்து வருகிறது. தமிழகத்தில் மட்டுமின்றிப் பிற நாடுகளில் தமிழ் பேசுவோர் தமிழுக்கு ஆற்றும் பணி பற்றியும் அறிய முடிகிறது. இவை யனைத்தையும் உள்ளடக்கி, தமிழ் மொழியின் ஆழ, அகலங்களைத் தெளிவாகக் காட்டும் நூலாகத் 'தமிழ் இலக்கிய வரலாற்றுக் களஞ்சியம்' அமைந்து சிறந்துள்ளது. தமிழுலகை முழுமையாகப் படம் பிடித்துக் காட்டுவதில் வெற்றி கண்டுள்ளது.

இவை தவிர எண்ணற்றோர் கல்லூரிப் பாடத் திட்டத்திற் காக இலக்கிய வரலாறு படைத்துள்ளனர். எனவே இவை அறிமுக அளவில், ஆய்வு நோக்கின்றி அமைந்துள்ளன. பொதுவாக நோக்குகையில், மிக நீண்ட காலமும், பரப்பும் கொண்ட தமிழிலக்கிய வரலாற்றில் பலரின் காலங்களைச் சரிவர வரையறை செய்ய இயலாமை ஒரு சிக்கல் எனின், அது புலவர் பற்றிய கட்டுக் கதைகளை வரம்பின்றி மொழிவதற்கும் இடனாயுள்ளது. இன்று இப்புனைகதைகளைப் புறந்தள்ளி உண்மை உணரவும், பிறவற்றின் துணையோடு காலத்தை ஓரளவு துல்லியமாகக் கணிக்கவும் முயற்சி கள் நடைபெறுகின்றன.

பல்வேறு சமய, சமூக, அரசியல்களுக்கிடையேயும், பலஇன, மொழி மக்களோடு கொண்ட உறவு காரணமாகவும் தமிழ் இலக்கிய வரலாற்றில், இலக்கிய வளர்ச்சி பல்வேறு வடிவங்களில் கிளைத்துள்ளது. எனவே காலம், சமயம், பொருண்மை, வகைமை எனும் ஏதேனும் ஒன்றன் அடிப்படையில் வரலாறு கணித்தல் இயலாததாகி ஒன்றுக்கு மேற்பட்ட அளவு கோல் களையே மேற்கொள்ள வேண்டியுள்ளது.

முழுமை வரலாறுகளைக் கண்ணோட்ட மிடுகையில் தமிழ் இலக்கிய வரலாற்றில் ஓர் வளர்ச்சியைக் காண்பதும் சுட்டத் தக்கது. தொடக்ககால வரலாறுகள் இலக்கியங்களை முதன்மைப் படுத்தின. தொடர்ந்து இலக்கண நூல்கள், உரையாசிரியர்கள், நிகண்டு முதலானவையும் இணைத்துக் கொள்ளப்பட்டன. சோழர் காலம், நாயக்கர் காலம் என்று வரையறுத்துக் கூறும் பாங்கோ அல்லது சமண நூல்கள், பௌத்த நூல்கள் எனக்

காணும் போக்கோ இடங்கொளலாயிற்று. பின் தமிழ் இலக்கிய, மொழி வளர்ச்சியைத் தூண்டுவனவும், துணைநிற்பனவும், ஆவன செய்வனவும் வரலாற்றில் இடம் பெறல் வேண்டும் என்ற உணர்வு மேலோங்கியது. தமிழ் வளர்த்த மடலாயங்கள் பற்றிச் சிந்திக்கப் பட்டன. இவ்வெண்ணம், நிலை இன்று முழுமை பெற்று தமிழுணர்வுடன் நிகழும் யாவற்றையும் உள்ளடக்கிக் காண்பதாக, தமிழ் இலக்கிய வரலாற்றுக் கருவூலமாகக் கனிந்துள்ளது.

பகுதி நிலை : ஏதேனும் ஒன்றினை மட்டும் முதன்மைப் படுத்திச் சிறப்பிக்கும் வரலாறுகள் பகுதி நிலையினவாம். தமிழிலக்கியப் பரப்பின் நீண்ட நெடுங்கால ஆளுமை, புத்திலக்கியப் பரவல் போன்றன இதற்கு நல்வாய்ப்பாக அமைகின்றன. காலம், வகைமை, சமயம், நாடு, தனிப்புலவர் எனப் பகுதி மேலும் சில உட்பிரிவுகளுக்குத் தன் இயல்பால் இடங்கொடுக்கிறது.

காலம் : குறிப்பிட்டதொரு காலத்தை வரையறுத்துக் கொண்டு அதற்குட்படும் தமிழ் நூல்களை வரலாற்றுப் போக்கில் தரல் இதன்பாற்படும். நூற்றாண்டு வரையறை கொண்டு அமையும் இலக்கிய வரலாறுகள் இத்தகையன. அண்ணாமலை பல்கலைகழகத்தாரால் திட்டமிடப்பட்டு சுருங்கிய அளவிலாக தி. வை. சதாசிவப் பண்டாரத்தார் (13, 14, 15நூ), சோம சுந்தர தேசிகர் (16, 17நூ) போன்றோரால் எழுதி வெளியிடப்பட்டன. இவ்வகையில் தொடர்ந்து முயற்சி செய்த மு. அருணாசலத்தின் பணி மிகுந்த பாராட்டிற்குரியது. காலவரையறை செய்வதற்கு மிக இடருடையதாய் அமையும் தமிழிலக்கியப் பரப்பில் புகுந்து பல நூல்களுக்குத் தம் நூற்றாண்டு இலக்கிய வரிசைகளின் மூலம், தெளிவாகக் காலத்தைக் கணித்து விளக்கியுள்ளார். அவ்வவ் நூற்றாண்டிற்குரிய எச்செய்திகளையும் விடாது தொகுத்து, விரிவாக, விளக்கமாகப் பேசியுள்ளார். ஒவ்வொரு நூலினுள்ளும் அமைந்திருக்கும் அட்டவணைகளும் பட்டியல்களும் ஆய்வாள ருக்குப் பெரிதும் பயனுடையன. ''நூற்றாண்டு வரலாற்றை முறைப்படுத்தி எழுதும்போது இலக்கிய அனுபவம் விரிவதோடு திட்டமான அறிவும் வளர்ந்து உறுதி பெறுகிறது'' என்பது இவர் கருத்து.[24]

---

24. மு. அருணாசலம்; முன்சுட்டியது; ப. V

இஃதன்றிச் சங்க காலம் (தெ. பொ. மீ); விடுதலைப் போராட்ட காலம் (ம.பொ.சி) என்ற நிலையிலும் இலக்கிய வரலாறுகள் சில காலத்தை வரையறுத்துத் தோன்றியுள்ளன.

வகைமை : முந்நூற்றிற்கும் மேற்பட்ட இலக்கிய வகைகளைப் பெற்றுள்ள தமிழ்[25] அவற்றுள் நூற்றிற்கு மேற்பட்டனவற்றுள் சிறப்பான வளத்தையும் வளர்ச்சியையும் கண்டுள்ளது. அவற்றைத் தனித்தனியே ஆய்ந்து வரலாறாக வெளிப்படுத்தியுள்ள நூல்கள் இவ்வகையினைச் சாரும். குறிப்பிட்டதொரு இலக்கிய வகையின் தோற்றம், வளர்ச்சி, இதுவரை எழுந்துள்ள படைப்புகள், அவற்றில் தனிச்சிறப்பிற்குரியன, அதில் சிறந்த படைப்பாளர் எனப் பல நிலைகளில் ஒரு முழுமை வரலாறாக இவை அமைகின்றன. இவ்வகையில் எழும் வரலாறுகள் மிகுதியும் ஆய்வுப் போக்கைக் கையாளுவது நவிலத்தக்கது. இதில் முன்னோடியாகவும், சிறப்புடை பல நூலாசிரியராகவும் ந. வீ. செயராமன் திகழ்கிறார். சிற்றிலக்கிய ஆய்வில் இவரது பணி பெரியது. தொடர்ந்து பலர் ஈடுபட்டுள்ளனர். உரைநடை வகையனவும் இதனுள் அடங்கும்.

சமயம் : தமிழ் மொழியின் சிறப்பு அதில் தோன்றியுள்ள பக்திஇலக்கியங்களால் பரவியுள்ளது எனில் மிகையன்று. சுமார் 15 நூற்றாண்டுகள் தமிழ் இலக்கியத்தின் வரலாறு சமயங்களின் பிடியிலேயே இருந்ததும் வெளிப்படை. உலகப் பெரும் சமயங்கள் எல்லாம் பணியாற்றியுள்ள பெருமை தமிழுக்குரியது. எனவே அவற்றின் அடிப்படையில் வரலாறு காணல் இயல்பாகிறது. மயிலை. சீனி. வேங்கடசாமி இதில் முன்னோடியாகவும் வழிகாட்டியாக்வும் அமைந்துள்ளார். ஒவ்வொரு சமயத்தவரும் தமிழ் மொழிக்கு அளித்துள்ள இலக்கண, இலக்கிய படைப்புகள், வளர்ச்சிக்கு வித்திட்டவை; படைத்துக் காட்டிய புதுமை; மொழி வளர்ச்சியிலும் அக்கறை காட்டியமை எனப் பலவாக இவ்வகை வரலாறு அமைகிறது.

---

25. ச. வே. சுப்பிரமணியன்; இலக்கிய வகையும் வடிவும்; தமிழ்ப் பதிப்பகம்; சென்னை; 1984; பக். 50-70

இரா. இளங்குமரன்; இலக்கிய வகை அகராதி; மணிவாசகர் பதிப்பகம்; சிதம்பரம்; 1985

ந. வீ. செயராமன்; சிற்றிலக்கியத் திறனாய்வு; இலக்கியப் பதிப்பகம்; சென்னை; 1980; ப. 45, பக். 163-168.

**நாடு :** அண்டை நாடுகளுடனான தமிழர் தொடர்பு வேரூன்றியதன் விளைவாக, அங்கும் தமிழிலக்கியம் முளைவிட்டு சிறப்பான வளர்ச்சியும் பெற்றுள்ளது. அவற்றையும் தமிழன்பர் உணரல் தேவை என்ற நோக்கில் மலேசிய இலக்கிய வரலாறு (மா. இராமையா, 1978), ஈழத்துத் தமிழ் நூல் வரலாறு (F. X. C. நடராஜா, 1970) எனப் பல நூல்கள் வெளிப்போந்துள்ளன. ஈழத்துத் தமிழிலக்கியம் பற்றி மற்றும் பல நூல்கள் எழுந்துள்ளமை யுடன், ஈழநாட்டுத் தமிழறிஞர் பலரும், பொதுநோக்கில் சிறப்புடைத் தமிழிலக்கிய வரலாறுகளைப் படைத்துள்ளமையும் சுட்டத்தக்கது. அண்மைக் காலத்தில் வெளிவந்துள்ள கா. சிவத் தம்பியின் 'தமிழில் இலக்கிய வரலாறு (வரலாறெழுதியல் ஆய்வு)' (1988) சான்றாகும்.

**தனிப்புலவர் :** பெருமைக்குரிய சாதனையாளர்களைத் தனித்துக் காட்டிச் சிறப்பிக்கும் பாங்கும் இதனுள் எண்ணத் தக்கது. இலக்கிய வரலாற்றுள் பேசப்படுவன அனைத்தும் இதனுள்ளும் விரிவாக நோக்கப்படுவதனால் பகுதிநிலை இலக்கிய வரலாற்றின் ஒரு கூறாக இங்கு இணைக்கப்பட்டுள்ளது. விரிவான வரலாற்றறிவிற்கு இவை துணைநிற்கின்றன. எண்ணற்ற சிறந்த படைப்புகள் இப்பிரிவில் தோன்றியுள்ளன.

குறிப்பிடத்தக்க அளவிற்குப் பகுதிநிலை இலக்கிய வரலாறுகள் தமிழில் மிகுதியாக எழுந்துள்ளன. இவற்றால் காலம் தெளிவற்ற இலக்கியங்கள் காலத்தெளிவு பெற்றுள்ளன. வழக்குக் கதைகளின் வம்பிலிருந்து பல புலவர்கள் விடுபட்டுள்ளனர். புதிய புதிய பார்வைகளையும், போக்குகளையும் பார்க்க முடிகிறது. இலக்கியத் தோற்றத்திற்கான அடிப்படையையும் சூழலையும் இனங்காண முடிகிறது. தமிழ் இலக்கிய வரலாற்றின் இருண்ட பகுதிகள் ஒளி கண்டுள்ளன எனப் பல சிறப்புகளை அடுக்கிக் கொண்டே செல்லலாம்.

### நூற்றொகை

இலக்கிய வரலாறுகளுக்குத் தோற்றுவாயாக அமைந்த நூற்றொகைகள், அதற்குரிய அடிப்படை ஆவணங்களுள் முதன்மை யானதாக அமைதல் வெளிப்படை. 'தமிழ் நூல் விவர அட்ட வணைகள்' மூலம் தமிழக அரசு குறிப்பிடத்தக்கத் தொண்டாற்றி யுள்ளது. தனித்த நூற்றொகைகளும், ஆய்வேட்டோடு இணைந்து

வரும் நூற்றொகைகளுமாக இது அவ்வப்போது தோன்றிக் கொண்டுள்ளது. மற்றும் புலவர் அகராதிகளும், நூலடைவுகளும் உருவாகி, இலக்கிய வரலாறு முழுமை பெறத் துணை நிற்கின்றன.

தமிழிலக்கியத்தின் தொன்மையும் இடையறாத வளர்ச்சியும் விரிந்த பரப்பும் பெருங்கடலாகத் தோற்றங் கண்டுள்ளது. இதன் வரலாறெழுதப் புகுந்தோரில் பலர் கரையோரம் நின்று கணித் துள்ளனர்; சிலர் துணிந்து மூழ்கி முத்தெடுத்துள்ளனர்; எல்லை வகுத்துச் சிலர் உட்புகுந்து விளக்கம் காட்டியுள்ளனர். குறிப்பிடத் தக்க பல இலக்கிய வரலாறுகளைத் தமிழ் பெற்றுள்ள போதிலும் முற்ற முழுமையாக வெளிக்கொணர்ந்தோமா அல்லது அறுதி யிட்டுள்ளோமா எனில் இல்லை என்பதே பதிலாக நிற்கிறது. தமிழிலக்கியத்தின் ஆழமும் அகலமும் மிகப் பெருந்தடையாக நிற்பதே இதற்குக் காரணம். தனிநபர் முயற்சியின்றிப் பல்லோர் முயற்சியும் பல்கோணப் பார்வையும் தொடர்ந்து இடம் பெறும் பொழுது விரைவில் வெற்றி கிட்டும்.

இம்முயற்சியின் ஒரு பகுதியாகப் பத்தொன்பதாம் நூற்றாண் டிலக்கியங்களை அறிமுகப்படுத்துகிறது இந்நூல்.

# பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கியப் போக்கு

நூற்றாண்டு வாரியாக இலக்கிய வளத்தினை ஆராயும் பொழுது அவ்வக் காலத்தின் தனிச் சிறப்புகள், ஏற்றங்கள் வீழ்ச்சிகள் முதலானவற்றை விரிவாகக் கண்டு இலக்கிய வரலாற்றினைத் தெளிவாக உணரமுடிகிறது. இது பொருளாய்விற்கும் பொருந்தும்.

பத்தொன்பதாம் நூற்றாண்டினை ஆராயும்பொழுது அது முன்னைய நூற்றாண்டுகளைவிடப் பல நிலைகளில் முதன்மை பெற்று விளங்கக் காணலாம். இருபதாம் நூற்றாண்டிற்கு உரமிட்ட பகுதியாகவும் இது விளங்குகிறது. "புனைகதை இலக்கிய காலம்" என நவிலப்படும் இவ்விருபதாம் நூற்றாண்டு அப்பெருமையைப் பெற வழிவகுத்தது பத்தொன்பதாம் நூற்றாண்டு. இன்று வளர்ந்து நிற்கும் இதுபோன்ற பல துறைகளுக்கும் இதுவே கால்கோளாக அமைந்திருப்பதும் குறிப்பிடற்பாலது. புதிய புதிய வகைகளை இலக்கியத்துள் புகுத்தி வளப்படுத்தப் பலர் முனைந்த அதே வேளையில் பழமைப் பற்றுடையோர் அதன் பாதுகாவலராகவும் விளங்கினர். இதனால் பழமையும் புதுமையும் ஒருசேர, தத்தம் வலிமையைக் காட்டிய களமாகவும் இது அமைகிறது.

இதன் பெருமைக்குத் துணைநின்ற காரணிகள், அதில் அமைந்துள்ள பொருள்கள், புத்திலக்கிய வகைகள், சிறப்புப் பெறும் இலக்கிய கர்த்தாக்கள், படைப்புகள் முதலானவற்றை இக்கட்டுரையுள் சுட்டுதல் நோக்கம். இதற்கு ஆய்வாளர்

தொகுத்த "பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கியம்" பற்றிய குறிப்புகளும் அதற்குத் துணை நின்ற நூல்களும் அடிப்படையாக அமைகின்றன.*

### இலக்கிய வளர்ச்சிக்குத் துணை நின்ற காரணிகள்

சுற்றுப்புறச் சூழல்களே ஒன்றன் தோற்றம், வளர்ச்சி, வீழ்ச்சி என்ற அனைத்திற்கும் காரணமாக அமைகின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கிய வளர்ச்சிக்கு ஏற்றம் தருவனவாகப் பல துணைக் காரணிகள் அமைந்துள்ளன. அவற்றை,

1. புரவலர்
2. மடம்
3. சமயம்
4. அரசு
5. இதழ்
6. கல்வி
7. சூழல்

என வகைப்படுத்தலாம்.

### புரவலர்

தமிழ் இலக்கிய வரலாற்றில் புரவலர்களின் பங்கு குறிப்பிடத் தக்கது. புலவர்களைப் போற்றிக் காத்துப் பலநிலைகளில் பெருமையளித்தவர்கள் இவர்கள். கபிலருக்குப் பாரியும், மோசிகீரனாருக்கு ஆய் அண்டிரனும் கம்பருக்குச் சடையப்ப வள்ளலும் சிறந்த அரண்களாக விளங்கியமை போன்று இப் பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் பலர் இருந்து புலவர்களை ஆதரித்தனர். அவர்களின் ஆக்கங்களை ஊக்குவித்தனர்.

(1) இராமநாதபுரம் அரசர்கள் இந்நூற்றாண்டுப் புரவலர் வரிசையில் முன்னணியில் நிற்கின்றனர். மாம்பழக் கவிச் சிங்க நாவலர், சரவணப் பெருமாள் கவிராயர், கிருட்டிணையங்கார் போன்றோர் இவர்தம் அவையில் அவைக்களப் புலவராக விளங்கும் சிறப்புப் பெற்றனர்.

(2) காவடிச் சிந்து பாடிய அண்ணாமலை ரெட்டியார் போன்ற பலரை ஆதரித்த புகழை ஊற்றுமலை இருதாலய மருதப்பத் தேவர் பெறுகிறார். வெறிமங்கை பாகக் கவிராயரைப்

---

* பின்னிணைப்பு காண்க.

பாதுகாத்த மருங்காபுரி சமீன்தார், மீனாட்சிசுந்தரக் கவிராய ருக்குத் துணைபுரிந்த எட்டையபுரச் சமீன்தார் என மற்றும் பலர்[1] குறிப்பிடத் தக்கவராவர்.

(3) பல நூல்கள் இவர்கள் தூண்டுதலின் (வேண்டுதல்) பேரில் எழுந்தன. சங்கரமூர்த்திக் கவிராயரின் 'சேற்றூர்ப் பள்ளு' இராமலிங்கத் தேவராலும்; அருணாசலக் கவியின், 'மதன சுந்தரப் பிரசாத சந்தான விலாசம்', தஞ்சை மகாராட்டிர மன்னராலும் எழுதுவிக்கப்பட்டன. காஞ்சியில் வாழ்ந்த சில செல்வந்தர்களின் வேண்டுகோளின்படி, 'காமாட்சியம்மையார் தோத்திரம்', 'கருக்கமர்ந்தாள் பதிகம்'. 'மஞ்சணீர்க்கரை காளிமா தேவியார் பதிகம்', 'சந்தை வல்லியம்மன் பதிகம்', 'சத்தித் திருவேகம்பர் சந்தப் பதிகம்' முதலானவற்றைக் கனகசபை நாயகர் பாடினார். அவை 1876இல் பதிப்பிக்கப்பட்டன.

(4) சிறந்த புலவர்களுக்கு விருதுகள் வழங்கிச் சிறப்பளித்தும் அவர்தம் இலக்கிய ஆற்றலை ஊக்குவித்தனர். சிவன்மலை சுப்பிரமணியக் கடவுள் மீது. 'சிவன்மலைக் குறவஞ்சி' பாடிய தே. இலக்குமண பாரதியாருக்கு இராமநாத சேதுபதி, 'பாரதி'ப் பட்டம் வழங்கிப் பெருமைப் படுத்தினார். முத்துராமலிங்க சேதுபதி மாம்பழக் கவிக்குக் 'கவிச்சிங்கம்' என்ற சிறப்பினை அளித்தார். அநந்தபாரதி ஐயங்காரின் நொண்டி நாடகத்திற்காக அக்கோயிலின் தருமகர்த்தா அவருக்குக் 'கவிராஜ சாமி' என்ற விருது அளித்ததுடன் ஒரு வீட்டினையும், தோட்டத்தினையும் அன்பளிப்பாக அளித்தார்.

(5) தஞ்சை சரபோசி மன்னர். நூலாராய்ச்சிக் குழு ஒன்று நிறுவித் தமிழ் வளர்த்தார். அதில் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர் முதலான பலர் இருந்தனர்.

(6) இப்பொழுதும் செயற்பட்டு வரும் மதுரைத் தமிழ்ச் சங்கத்தினை நிறுவி வளர்த்தவர் பாண்டித்துரைத் தேவராவார். இச்சங்கத்தில்தான் கந்தசாமிக் கவிராயர் 'தமிழ்நூற் பரிசோதக'ராய் அமர்ந்து, தனிச் செய்யுட் சிந்தாமணியைத் தொகுத்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

1. மெருவளகுப்பம் தாண்டவராயர், அப்பாவையரையும்; சிவகங்கைச் சிற்றரசர், வெண்பாப் புலிக் கவிராயரையும் சேற்றூர் அரசர், முகவூர் கந்தசாமிக் கவிராயரையும் புரந்துள்ளனர்.

(7) புரவலர் சிறந்த புலவராகவும் இருந்து இலக்கியங்களைப் படைத்துள்ளமையும் சுட்டற்பாலது. பாண்டித்துரைத் தேவர் தம் ஆசிரியர் சிவஞான யோகிகள்மீது 'இரட்டை மணிமாலை'யும், வழிபடு தெய்வம் இராச இராசேசுவரி மீது 'பதிகம்' ஒன்றும் பாடியுள்ளார். முத்துராமலிங்கத் தேவர் 'சிலேடை' பாடுவதில் வல்லவராய் விளங்கியதுடன் 'முருகரநுபூதி', 'வள்ளி மணமாலை' போன்ற நூல்களையும் பாடினார். பொன்னுசாமித் தேவரும் 'சித்திரகவி', 'கடல் வருணனை' முதலியன பாடியுள்ளார்.

இவ்வாறு புரவலர், புலவரைத் தம் அவைக் களத்துள் இணைத்தும், ஆதரித்தும், இலக்கியங்களைப் படைக்கத் தூண்டியும், விருதுகளளித்துச் சிறப்பித்தும், தனிப்பட்ட நிலையில் சங்கங்களைத் தோற்றுவித்தும், தாமே புலவராக மாறியும் தமிழ் தழைக்க உழைத்துள்ளனர்.

மடம்

பதினேழாம் நூற்றாண்டளவில் தமிழகத்தில் மடங்கள் தமிழ்த்தொண்டு புரியத் தொடங்கின.[2]

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் திருவாவடுதுறை யாதீனத்தில் தலைமை பூண்டிருந்த சுப்பிரமணிய தேசிகர் தமிழ்ப் புலவர்களை மிகவும் போற்றினார். இவரால் ஆறுமுக நாவலருக்கு நாவலர் பட்டம் அளிக்கப்பட்டது. ஆசுகவிகள் இயற்றுவதில் சிறந்து விளங்கிய புலிக்குட்டி இராமலிங்கத் தம்பிரான், யாழ்ப்பாணத்து சபாபதி நாவலர் போன்றோர் இதனைச் சார்ந்தோரே.

சபாபதி நாவலருக்குத் திருவாவடுதுறை யாதீனம் நாவலர் பட்டம் வழங்க, மதுரைத் திருஞானசம்பந்தர் ஆதீனம் மகாவித்துவான் பட்டம் வழங்கிச் சிறப்பித்தது.

துறைசை ஆதீனத்தின் பெரும் புலவராய் மீனாட்சி சுந்தரம் பிள்ளை வீற்றிருந்து பல நூல்களை இயற்றினார்.

வானமாமலை மட ஆத்தான வித்துவானாகத் திகழ்ந்தவர் அநந்தகிருட்டிண ஐயங்கார்.

பதிப்புத் துறையிலும், உரை வரைவிலும் அதிக ஈடுபாடு கொண்டிருந்த, சிதம்பரம் இராமலிங்கத் தம்பிரான் ஈசானிய மடத்தினைச் சார்ந்து செயல்பட்டார்.

---

2. வித்தியானந்தன், சு; இலக்கியத் தென்றல்; ப. 22.

இங்ஙனம் பத்தொன்பதின் சிறந்த புலவர் பலர் மடங்களில் இருந்து செயல்பட்டுள்ளமை அதன் சிறப்பினை உணர்த்தும்.

**சமயம்**

தம் சமயத்தினைப் பரப்புவதற்காகத் தமிழ்நாட்டிற்குள் புகுந்த கிறித்தவர்களும், முகமதியர்களும் தமிழ்மொழியைக் கற்றதுடன் அமையாது, வைதிக சமயத்தினரைப் பின்பற்றி இலக்கியங்களும் படைக்கத் தொடங்கினர். தம் சமயப் பரப்புதலுக்குச் சிறந்த துணைக் கருவியாக இலக்கியங்களைக் கொண்டனர். அவர்களின் எழுச்சி கண்ட வைதிக சமயத்தினர் தங்கள் சமயத்தினைப் பாது காக்க வேண்டியதன் தேவை உணர்ந்து தாங்களும் இலக்கியம் படைப்பதில் வேகம் கொண்டனர்.

தத்தம் சமயத்தினை வளர்க்க முனைந்த இவர்களால் தமிழ் மூன்று நிலைகளில் பயனடைந்தது.

1. துதிப்பாடல்கள்
2. சமய விளக்க நூல்கள்
3. கண்டனங்கள்.

என அவற்றைக் குறிப்பிடலாம்.

இறைவனைத் துதிப்பதாக அமையும் பக்திப் பாடல்கள் முதனிலையில் அமைகின்றன. தண்டபாணி சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள், மீனாட்சி சுந்தரம் பிள்ளை, வேதநாயகம் சாஸ்திரியார், கிருஷ்ண பிள்ளை, குலாம் காதிறு நாவலர், மஸ்தான் சாகிபு போன்றோர் இதில் குறிப்பிடத் தக்கவராவர்.

தம் சமயங்களின் கொள்கைகளையும், சிறப்புகளையும் விளக்கும் நூல்கள், சமய விளக்க நூல்களைச் சாரும். ஆறெழுத் தானந்த சுவாமிகளின் 'சகலாகம சாரக் கட்டளை', இராமாநுச நாவலரின் 'வைணவ தத்துவம்', இரட்சணியம் ஹூத்தரின் 'ஞான உபதேச ஒழுங்கு' போன்றன சான்றுகளாம். ஒரு சமயத்தினைப் பின்பற்றுவோர் அல்லது அறிய விழைவோர் அதுபற்றி முழு நிலை யில் அறிய உதவுவதாக இத்தகு நூல்கள் அமைகின்றன.

அவரவர் சமயத்தினைப் பரப்புதற்கிடையே ஒருவருக்கொருவர் ஏற்பட்ட போட்டியின் விளைவாகக் கண்டனங்கள் எழுந்தன. ஒருவர் சமயத்திலுள்ள குறைபாடுகளாகத் தாம் கண்டவற்றை மற்றவர் சுட்டி அதனை எதிர்த்தல் கண்டனங்களாகின்றன. இவ்வாறு ஒருவர் எழுப்பிய கண்டனத்திற்கு மற்றவர் பதில்

அளிப்பதாக எதிர் நூல் விடுவதும், அதற்கு மறுப்புத் தருவதுமான விவாதம் நூல்களிலும் நடைபெறலாயிற்று.

வீரமாமுனிவர் காலம் முதல் தமிழில் சமயம் தொடர்பான கண்டன நூல்கள் வழங்கி வந்திருப்பினும் பத்தொன்பதாம் நூற்றாண்டில் பெருமளவு காணப்படுகிறது. 'கேசி' நூல்களின் தொடர்ச்சி எனவும் இவற்றைக் கொள்ளலாம். சமயத்தினைப் பரப்ப வேண்டுமெனக் கிறித்தவர், முகமதியர் இதில் முனைய, பாதுகாப்பு உணர்வில் வைதிக சமயத்தினர் முயன்றனர் எனலாம்.

அந்தோணி நாதரின், 'பதிமத்தேசு தூஷண மறுத்தல் ஆகிய தர்க்கக் கும்மி'; மஸ்தான் சாகிபுவின் 'கிறித்தவ மத கண்டனம்'; ஆறுமுக நாவலரின் 'சைவ தூஷண பரிகாரம்'; போன்ற நூல்களைச் சான்றாகக் காட்டலாம். சாது இரத்தின சற்குரு என்பவர் 24 கண்டன நூல்களைப் படைத்துள்ளமை குறிப்பிடற்பாலது.

ஒருவரின் கண்டனத்திற்கு உரியவர்தான் பதில் தரல் வேண்டுமெனாது அவர் சார்பில் பிறர் தருவதனையும் இங்குக் காண முடிகிறது. சுன்னாகத்தில் இருந்த முத்துக் கவிராசர், கிறித்து சமயத்தைத் தாக்கி வரைந்த 'ஞானக் கும்மி'யை மறுத்து, கனகசபைப் புலவர் 'அஞ்ஞானக் கும்மி மறுப்பு' என்ற நூலைப் பாடினார். இதற்கு மறுப்பாக, கொக்குவில் சிலம்பநாத பிள்ளை என்பவர், 'அஞ்ஞானக் கும்மி மறுப்புக்கு மறுப்பு' எனும் பெயரில் நூல் வெளியிட்டுள்ளார் என்பதனைச் சான்றாக நவிலலாம்.

கிறித்தவ சமய நூல்களே சென்ற நூற்றாண்டில் அதிகமாக வெளியாயின[3]. கிறித்தவர்களுக்கு இருந்த அளவு வாய்ப்பும் உதவியும் பிறருக்கு இன்மையால் அவர் இலக்கியங்கள் ஏட்டளவில்

---

3. "தம் சமயம் பரப்புதற்கெனப் பல்வேறு வகைப்பட்ட நூல்களைப் பல அறிஞர்கள் எழுதி வெளியிட்டனர். யாழ்ப்பாணம், நாகைப்பட்டினம், புதுவை, தரங்கம்பாடி, வேப்பேரி முதலிய பல இடங்களில் தம் சமய நெறிக்கெனவே பல அச்சகங்களை நிறுவி, அவற்றின் வழி எண்ணற்ற நூல்களை வெளியிட்டனர். கத்தோலிக்கர், புரோட்டஸ்டண்டு சமயத்தினர் ஆகிய இருவருமே இத்துறையில் பெரிதும் கருத்திருத்தித் தத்தம் கொள்கைகள் வளரப் பாடுபட்டனர்".
—பரமசிவானந்தம், அ. மு; பத்தொன்பதாம் நூற்றாண்டின் தமிழ் உரைநடை வளர்ச்சி; 1966; ப. 169.

நின்றுவிட்டன எனலாம். முகமதியர் நூல்கள் பெரும்பாலும் மொழிபெயர்ப்பாக அமைந்துள்ளன என்பர்.[4]

**அரசு**

பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆட்சி புரிந்த ஆங்கில அரசு இரு வகைகளில் தமிழ் இலக்கிய வளர்ச்சிக்கு உதவி புரிந்துள்ளது. ஒன்று அச்சகம் அமைத்துக் கொள்ள இந்தியருக்கு அனுமதி அளித்தது. மற்றொன்று சென்னைக் கல்விச் சங்கம் நிறுவியது.

அரசு 1835இல் அச்சக அனுமதியை வழங்கியது. அதுவரையில் பாதிரிமார்களே அச்சகம் அமைத்து நூல் வெளியிடும் உரிமை பெற்றிருந்தனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் கிறித்தவ சமய நூல்கள் மிகுதியாக வெளிவந்தமைக்கு இதுவே முதல் காரண மாகும்.

அச்சக உரிமை பெற்றமை புலவரிடையேயும் பொது மக்களிடையேயும் ஒரு புதிய எழுச்சியைத் தூண்டியது. புலவர் தம் எழுத்துகளை அச்சில் காண விழைந்தனர். எளிதாகக் குறைந்த விலையில் நூல்கள் கைக்கு எட்டிய பொழுது கற்றோரிடை மட்டுமின்றிப் பாமரரிடையேயும் நூல்கள் வாங்கும் விழைவு எழுந்தது[5]. நாட்டுப்புற இலக்கிய வடிவிலும், மக்களிடையே வழக்கில் வழங்கும் கதைகளாகவும் பல நூல்கள் எழுந்தமை இவ்வுண்மையை உணர்த்தும்.

அச்சகம் அமைத்துக் கொள்ளும் அனுமதி கிடைத்தவுடன் இங்குள்ள பலர் அச்சகங்களைத் தொடங்கினர். ஆறுமுக நாவலர் வண்ணார்பண்ணையில் முதன் முதலாக 1849இல் அச்சகம் நிறுவினார். பின் சென்னையிலும் நிறுவிப் பல உரைநடை

4. மேற்படி, ப. 164.

5. "ஏட்டுச் சுவடிகள் விலை உயர்ந்தவை; அவற்றைச் சில செல்வந்தர்கள் மட்டுமே வாங்க முடிந்தது. அச்சிட்ட நூல்கள் குறைந்த விலைக்குக் கிடைத்தமையால் வாங்கிப் படிப்பவரின் எண்ணிக்கையும் திடீரென உயர்ந்துவிட்டது. அதனால் உரைநடை நூல்கள் எழுதுவதற்கு ஏற்ற சூழ்நிலை அமைந்து பலர் நூல்களும கட்டுரைகளும் எழுதத் தொடங்கினார்கள். ஆகவே இத்தனை நூற்றாண்டுகளாக இயற்றப்பட்ட நூல்களைவிடப் பலமடங்கு நூல்கள் இந்நூற்றாண்டுகளில் எழுதப்பட லாயின".
—வரதராசனார், மு; தமிழ் இலக்கிய வரலாறு; 1980; ப. 225.

நூல்களை எழுதி அச்சிட்டார். யாழ்ப்பாணத்தைச் சார்ந்த சபாபதி நாவலர் சென்னையில் "சித்தாந்த வித்தியானுபாலன யந்திர சாலை"யை நிறுவினார்.

பழைய நூல்கள் அனைத்தினையும் அச்சிட்டுப் பாதுகாக்க வேண்டும் என்ற விருப்பில் அவற்றின் ஏட்டுச்சுவடிகள் அனைத்தும் திரட்டப்பட்டன. பலர் இதில் முழுமையாக ஈடுபட்டனர். நூல்களை அச்சிடுங்கால் அவற்றிற்கு உரையும் எழுதினர். ஆறுமுக நாவலர், சபாபதி நாவலர், சி. வை. தாமோதரம் பிள்ளை, திருமயிலை சண்முகம் பிள்ளை, தாண்டவராய முதலியார், வீராசாமி செட்டியார், கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், முகவை இராமாநுச கவிராயர் போன்ற பலர் இம் முயற்சியில் ஈடுபட்டனர்.

1812இல் சென்னைக் கல்விச் சங்கம் (The College of Fort St. George) நிறுவப்பட்டது. 1820 முதல் நன்கு செயல்படத் தொடங்கியது. இதன் சார்பாக, நூல்நிலையம், அச்சகம், புத்தக விற்பனை நிலையம் என மூன்று அமைந்திருந்தன. சென்னையில் மாவட்ட அதிகாரியாக இருந்தவரும், தமிழ் அறிந்தவருமான எல்லீஸ் துரையும், கர்னல் மக்கன்ஸி துரையும் இச்சங்கத்தை நிறுவிய முதன்மையாளர்களாவர்.[6]

எல்லிஸ்துரை இக் கல்விச் சங்கத்தின் மேலாளரும் சிறந்த தமிழ்ப் புலவருமாய் விளங்கியவருமான முத்துசாமி பிள்ளை என்பவரை 1816இல் தமிழ் நாட்டின் பல இடங்களுக்கும் அனுப்பி, பல ஏடுகளைச் சேர்த்தார். முக்கியமாக, வீரமாமுனிவர் இயற்றிய நூல்களைத் தேடிக் கொணரச் செய்தார்.

மாணவருக்கான பாடநூல்களின் தேவை ஏற்பட்டு மொழி பெயர்ப்பு நூல்களும் உரைநடை நூல்களும் இச்சங்கத்தினால் உருவாக்கப்பட்டன. இச்சங்கமும் பல பாடநூல்களையும் உரைநடை நூல்களையும் எழுதி வெளியிட்டது.

கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகர், சரபோசி மன்னரின் நூலாராய்ச்சிக் குழுவில் வேலை செய்தபின் இக்கல்விச் சங்கத்தில் பணிபுரிந்தார். தாண்டவராய முதலியாரும் இச்சங்கத்தில் பணி புரிந்தவர்களில் குறிப்பிடத் தக்கவராவர்.

---

6. வேங்கடசாமி, மயிலை. சீனி; பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் (1800-1900); 1962; ப. 3.

இவற்றுடன் 1850இல் நிறுவப்பட்ட 'சென்னைப் பாடசாலைப் புத்தகச் சங்கமும்' (The Madras School Book Society)—'அரசினர் கீழ்த்திசை சுவடிகள் நூலகமும்' (Government Oriental Manuscripts Library) இங்குக் குறிப்பிடத்தக்கன. புத்தகச் சங்கம் பல உரைநடை நூல்களை எழுதி வெளியிட்டதுடன் நல்ல உரைநடை செய்வோர்க்குப் பொருள் உதவி செய்து அன்பளிப்பு களையும் அளித்தது. இராபின்சன் குருசோ, இந்திய சரித்திரம், உலக சரித்திரம் முதலிய சிறந்த மொழிபெயர்ப்பு நூல்கள் இச்சங்கம் அளித்த அன்பளிப்புக் காரணமாக வெளிவந்தவை யாகும். ஏட்டுப் பிரதிகளைத் தொகுத்து அச்சிடும் பணியைச் சுவடி நிலையம் மேற்கொண்டது.

தமிழிலக்கிய வரலாற்றாராய்ச்சியிலும், சமய நூல் ஆராய்ச்சி யிலும், பண்டைய திருவிதாங்கூர் அரசர் கால ஆராய்ச்சியிலும் மிகவும் உழைத்த மனோன்மணீய நாடகவாசிரியர் சுந்தரம் பிள்ளைக்கு ''இராவ்பகதூர்'' விருதளித்து அரசு சிறப்பித்ததும் இங்குச் சுட்டத் தக்கதாம்.

## இதழ்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோற்றம் கண்ட 'இதழ்' களும் தமிழ் வளர்ச்சிக்குப் பெருந் தொண்டாற்றியுள்ளன. முதன் முதலாகத் தமிழில் வார, திங்களிதழ்கள் வெளியிட்டவர்கள் கிறித்தவப் பாதிரிமார்கள்[7] என்பர். இப்பொழுதுள்ள தமிழிதழ் களுள் மிகப் பழையது யாழ்ப்பாணத்தில் 1841இல் தோன்றிய 'உதய தாரகை'யாகும் என்பது இவண் சிறப்பித்தற்குரியது.

புதினம், நாடகம், செய்யுள் எனப் பல இலக்கிய வகை களுக்குத் தம்முள் இடமளித்துச் சிறப்பளித்த நிலையில் இவை

7. ''தமிழ்த்தாள் என்னும் பெயருள்ள ஒரு திங்கள் வெளியீடு 1831 முதல் 'சென்னை மதத்துண்டுப் பிரசுரக் கழகம்' என்னும் சங்கத்தாரால் சென்னையில் வெளியிடப் பெற்றது. இத்தாளின் தமிழ்ப் பெயர் யாதென்று திட்ட மாகத் தெரியவில்லை. இதுதான் தமிழில் முதன்முதல் வெளிவந்த மாதத் தாள் எனத் தோன்றுகிறது. இஃது 1846ஆம் ஆண்டு வரையில் நடைபெற்று வந்தது. பின்னர் அந்த ஆண்டில் மாதம் இருமுறை வெளியீடாக மாற்றப்பட்டு ஆறு மாதத்திற்குப் பின்னர் நிறுத்தப் பட்டது.
—வேங்கடசாமி, மயிலை. சீனி; கிறித்தவமும் தமிழும்; 1971; ப. 59.

இலக்கியப்பணி புரிந்துள்ளன. ராஜம் ஐயரின் 'கமலாம்பாள் சரித்திரம்', விவேக சிந்தாமணி இதழில் 1893-1895இல் தொடர் கதையாக வந்து, 1896இல் நூலாக வெளியிடப்பட்டது. தமிழின் முதல் தொடர்கதைப் புதினம் எனும் சிறப்பினையும் பெற்றது.

விவேக சிந்தாமணி இதழ் 1892இல் நாராயணசாமி ஐயரின் 'நடுவேனிற்கனவு' என்னும் மொழிபெயர்ப்பு நாடகம்; 1894இல் ஆர். சக்கரவர்த்தி ஐயங்காரின் 'ஒரு தாத்தா செய்த தீர்மானம் அல்லது தங்கம்மாள் தலைவிதி'; என். சீதாராம நாயுடுவின் இரண்டு சகோதரர்கள்'; 1898இல் சி. ஏ. சுப்பிரமணிய ஐயரின் 'கற்பின் விஜயம்'; 1900இல் சி. அருணாசல ஐயரின் 'நீலா'; கோபாலகிருஷ்ண ஐயரின் 'குணசீலன்', கே. வி. எஸ். ஸின் 'காந்திமதி' முதலான புதினங்களையும் வெளியிட்டுப் புத்திலக்கிய வகைகளுக்கு மிகுந்த ஆதரவு அளித்துள்ளது.

ஞானபோதினி இதழில் 1894இல் வி. நடராஜ ஐயரின் 'ஞான பூஷணி' எனும் தொடர்கதையும் 1900இல் 'விக்கிரமோர்வசி நாடகம்' எனும் வடமொழி மொழிபெயர்ப்பு நாடகமும் வெளி யிடப் பட்டன.

ஜனவிநோதினியில் 1886இல் 'நாகநந்தம்' எனும் நாடகம் எழுதப்பட்டது.

இவ்விதழ்கள் பயணக் கட்டுரைகள் படைப்பிற்கும் இடமளித் துள்ளன[8].

வீராசாமி செட்டியார், முதலில் தன் கட்டுரைகளை ஒவ்வொன்றாகத் 'தினவர்த்தமானி' என்னும் இதழில் எழுதிப் பின்பே 'விநோத ரச மஞ்சரி'யாக நூலுருவம் கொடுத்தார்.

கிருஷ்ண பிள்ளையின் 'இரட்சணிய மனோகர'த்தில் உள்ள பதிகங்கள் 'நற்போதகம்' என்னும் இதழில் முதலில் வெளிவந்தன வாகும்.

இவற்றால். இதழ்கள் இலக்கியப் பணியில் பெரும் பங்கு கொண்டு, புத்திலக்கியங்கள் முதலானவற்றிற்குப் பொது மக்களிடையே செல்வாக்கினைப் பெற்றுத் தந்தமை புலப்படும்.

---

8. சுவாமிநாத ஐயர், சி. வி; 'திருக்கழுக்குன்றம்'—விவேக சிந்தாமணி; பிப்ரவரி, 1900.
'ராணிப்பேட்டை'—ஜனவிநோதினி, சனவரி 1897.
'சென்னையில் ஆகாய யாத்திரை'—ஜநாநந்தினி; மார்ச் 1891.

இலக்கியப் படைப்பாற்றல் நிரம்பிய புலவர் சிலரும் இதழ்களை நடத்தியமையை, யாழ்ப்பாணத்தைச் சார்ந்த சபாபதி நாவலர் 'ஞானாமிர்தம்' இதழை நடத்தியமை கொண்டும், குலாம் காதிறு நாவலர் பினாங்கு சென்று 'வித்தியா விசாரிணி'யை நடத்தியமை கொண்டும் அறியலாம். மற்றும் சி. வை. தாமோதரம் பிள்ளை 'உதய தாரகை'க்கும், பரிதிமாற் கலைஞர் 'ஞான போதினி'க்கும் ஆசிரியராகப் பணியாற்றியுள்ளனர்.

**கல்வி**

ஆங்கிலேயர் ஆட்சியில் மெக்காலே என்பாரின் முயற்சியால் ஆங்கிலக் கல்வி தமிழருக்குக் கிடைத்தது. சென்னை மாநிலத்தில் 1857இல் பல்கலைக் கழகம் நிறுவப்பட்டு, சாதிசமய வேறுபாடின்றி ஆண், பெண் இருபாலாருக்கும் கல்வி அளிக்கப்பட்டது.

இயற்றமிழ், காலத்திற்கேற்ற புதிய போக்கில் வளரத் தொடங்கியது. ஆங்கிலத்தில் வளர்ந்துள்ள புதிய துறைகள் தமிழில் இல்லை என்பதை உணர்ந்த பலர் அக் குறைகளில் ஒன்றையோ சிலவற்றையோ நீக்குவதைத் தங்களின் நோக்கமாகக் கொண்டனர்[9].

புதினம், கட்டுரை வரைதல் போன்றவற்றுடன் ஆராய்ச்சி நூல்கள் எழுதும் எண்ணமும் வளர்ந்தது. நாடக விலக்கியத்தைச் செம்மைப்படுத்த முயன்று மனோன்மணீயம் மூலம் வெற்றியும் கண்டனர்.

ஆங்கிலக் கல்வியுடன் தமிழ்க் கல்விக்கும் வாய்ப்பளித்தமை இங்கு இணைத்து நோக்கற்பாலது. இதற்கு மிகவும் முயன்று உழைத்தவர்கள் பூர்ணலிங்கம் பிள்ளையும் பரிதிமாற் கலைஞரும் ஆவர்.

தாமோதரம் பிள்ளை யாழ்ப்பாணத்தில் ஏழாலை என்னுமிடத்தில் தமிழ்ப் பாடசாலை நிறுவி, முருகேச பண்டிதர்,

---

9. "New ideas and knowledge of the West which they initiated as a result of the Introduction of the English education had also greatly broadened the vision of the Tamil Scholars".
—Subramaniam, P; 'Tamil Literature in the nineteenth Century'—A Sociological study; Journal of Tamil Studies-13; June 1971; p. 89.

குமாரசாமிப் புலவர் முதலியோர் வாயிலாகத் தமிழ்க் கல்வியைப் பரப்பினார். ஆறுமுக நாவலர் சிதம்பரத்திலும், யாழ்ப்பாணத் திலும் தமிழ்க் கல்லூரிகளை நிறுவினார்.

இது தவிர ஆசிரியர்—மாணாக்கர் என்ற பழைய பரம்பரையும் தொடர்ந்து வளர்ந்துள்ளது. மீனாட்சிசுந்தரம் பிள்ளை எண்ணற்ற மாணவர்களுக்குத் தமிழறிவைத் தந்தவர். வல்லூர் தேவராச பிள்ளை, உ. வே. சாமிநாதையர் போன்றோர் குறிப்பிடத் தகுந்தவர். ஆறுமுக நாவலரின் ஆசிரியர் சேனாதி ராயர், கூழங்கைத் தம்பிரானிடம் பயின்றவர். பொன்னம்பலம் பிள்ளை, சபாபதி நாவலர் போன்றோர் ஆறுமுக நாவலரின் மாணாக்கராவர்.

எனவே இருமொழிக் கல்வியால், பழைமையின் தொடர்ச்சி யும், புதுமையின் வரவும் அமைந்ததுடன் மொழிபெயர்ப்பு தழுவல் ஆகியனவும் சிறப்புற்றன.

சூழல்

மேற்கண்டவை தவிர, சில, பொதுக் காரணிகளும் இலக்கிய வளர்ச்சிக்குப் பின்புலமாக அமைந்துள்ளன. அவையே இங்குச் சூழல் எனக் குறிக்கப்பட்டுள்ளன.

(1) தனிப்பட்டவர்கள், மற்றும் அரசு தவிர சமுதாயத் தாலும் புலவர்கள் சிறப்பிக்கப்பட்டனர். சான்றாக அநந்த கிருட்டிண ஐயங்கார், அபிநவ காளமேகம், அபிநவ பிள்ளைப் பெருமாளையங்கார் என்னும் சிறப்பினைப் பெற்றமையைச் சுட்டலாம். ஐதுறூசு நயினார் புலவர், முகமதியரிடையே மிகுந்த புகழுடன் விளங்கினார். இவருக்காகப் 'புலவர் வரி' எனும் ஒன்று தோற்றுவிக்கப்பட்டு, புலவருக்கும் அவர் குடும்பத்தாருக்கும் கொடுக்கப்பட்டது. மற்றும் பல சிறப்புகளையும் பெற்றார்.

(2) பாட நூல்களைத் தமிழாக்குவோருக்குப் பரிசளிக்கப் பச்சையப்பர் அறநிலையத்தார் சென்னைப் பல்கலைக் கழகத் தாரிடம் ஒரு தொகையைத் தந்துதவினர்.

(3) இக்காலத்தில் "அரங்கேற்ற" முறையும் கடைப்பிடிக்கப் பட்டது. அநந்த கவிராயரின் 'உத்தர ராமாயண நாடகம்' 1810இல் கும்பகோணம் சாரங்கபாணி பெருமாள் கோயிலில் அரங்கேறியதும், வேங்கடகிருட்டிணப் பிள்ளையின், 'வீரராகவப்

பெருமாள் கலம்பகம்' 1867இல் அரங்கேற்றம் கண்டதும் இதற்குச் சான்றுகளாம். வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகளின் 'திருவரங்கத் திருவாயிரம்' முதலான நூல்கள் பலவும் இச் சிறப்பைப் பெற்றுள்ளன.

(4) தமிழ்ப் புலவருடன், தமிழின் இனிமையை உணர்ந்த ஐரோப்பியரும் அதன் வளர்ச்சியில் ஈடுபட்டனர். தமிழில் தாம் பெற்ற இன்பத்தைத் தம் நாட்டவரும் பெறும் பொருட்டு இனிய நூல்களைத் தம் மொழிகளில் மொழிபெயர்த்தனர். தமிழின் பெருமையை உலகிற்கு உணர்த்தினர். ஜி. யு. போப் இதில் மிக உயர்ந்து நிற்கிறார். திருவாசகத்தின் பெருமையும், குறளின் அருமையும் இவரால் மேனாட்டாருக்கு வெளிப்பட்டன.

## இலக்கியப் பொருள்

இங்குப் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பொருளியல்பு ஆராயப்படுகிறது. இந்நூற்றாண்டில் 106 இலக்கிய வகைகள் காணப்படுகின்றன. அவை பல பொருட்களில் அமைந்துள்ளன. அவற்றைப் பின்வருமாறு வகைப்படுத்தி விளக்கலாம்.

1. பக்தி
2. வாழ்க்கை வரலாறு
3. பயணம்
4. சமுதாயம்
5. மொழி
6. அரசியல்
7. அகம்
8. புறம்
9. அறம்
10. படைப்பாளர்.

இவற்றுள் பக்தி மிகுந்த செல்வாக்கு கொண்டதாகவும் வாழ்க்கை வரலாறு முதல் அரசியல் வரையிலானவை புதிதாகத் தோன்றியன வாகவும், ஏனைய மரபுப் பொருட்களாகவும் அமைகின்றன.

**பக்தி**

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெரும்பகுதி யிலக்கியங்கள் தம்முள் கொண்டிருப்பது பக்திப் பொருளாகும். இதற்குக் காலச் சூழல் அடிப்படைக் காரணம்.

பிரபந்தங்கள் பலவற்றிலும், நாடகம் முதலானவற்றிலும் பக்தி முதன்மை பெறக் காண்கின்றோம். அலங்காரம், துதி சங்கீர்த்தனம், சந்நிதிமுறை, நாமாவளி, அநுபூதி, திருப்புகழ், தோத்திரம், இரங்கல், கட்டளை, அட்டகம், லகரி முதலான வகைகள் பக்திப் பொருளையே தம் இலக்கணமாகக் கொண்டுள்ளன என்று கூறுமளவிற்குப் பக்திக்குப் பெருமையளித்துள்ளன. மற்றும், பிள்ளைத் தமிழ், பதிகம், குறவஞ்சி, கலம்பகம், மாலை, கும்மி, நாடகம், தாலாட்டு, சங்கிரகம், போன்றனவும் இப்பொருளுக்கு மிகுதியான இடமளித்துள்ளன.

அருணகிரிநாதரால் தோற்றுவிக்கப்பட்ட அலங்காரமும், கடுவெளிச்சித்தர் அறிமுகப்படுத்திய ஆனந்தக் களிப்பும், தாயுமானவரின் பெயரைப் பெருமைப்படுத்தும் கண்ணியும் இக் காலத்தில், இப்பொருளில் சிறந்த வரவேற்பைப் பெற்றன. தாயுமானவரில் திளைத்த மஸ்தான் சாகிபு தம் உணர்வுகளையும் கண்ணிகளிலேயே மிகுதியாக வடித்துள்ளார்.

சமயத்தினைப் பரப்புவதற்கு ஒரு வழியாகக் கிறித்தவர் நாட்டுப்புறப்பாடல் வடிவங்களைக் கையாண்டனர். பாமரருக்குத் தங்கள் கொள்கைகள் சென்று சேர்வதற்கும், எளிதாகப் புரிந்து கொள்வதற்கும் இதனைத் துணையாகக் கொண்டனர். சான்றாக வேதநாயகம் சாஸ்திரியின் 'ஞானத் தாராட்டு', 'திருச்சபைத் தாராட்டு', 'சாத்திர ஞானக் கும்மி', 'திருச்சபை யூஞ்சல்', அந்தோணிக் குருசு சவேரியாரின் 'குழந்தைகளின் தாராட்டு', சாந்த குருசுப் புலவரின் 'அர்ச். அலசம்மானை', சூசைப் பிள்ளையின் 'ஞானசவுந்தரி அம்மானை', அந்தரிசுப் புலவரின் 'அன்னை அழுங்கல் ஒப்பாரி' போன்றவற்றைச் சுட்டலாம்.

முகமதியப் புலவர்களும் இம்முறையைப் பின்பற்றியமையை முகம்மது உசேன் புலவரின் 'நபியுல்லா பேரில் காரணக் கும்மிப் பதம்', உதுமா நயினார்ப் புலவரின் 'சலவாத்துப் பாட்டு', 'சாகுல் அமீது ஆண்டவர் புகழ்ப்பாவணி' முதலியவற்றால் உணரலாம்.

வைதிக சமயத்தினர், நாட்டுப்புறப் பாடல் வடிவங்களைக் கையாண்டுள்ளமையுடன் பெருமளவு செந்நெறி இலக்கியங்களைப் பயன் கொண்டுள்ளனர். இராமசாமிச் செட்டியாரின் 'திருப்பரங்கிரி குமரவேல் தாலாட்டு', இரத்தினவேலு நாயகரின் 'திருவண்ணாமலை அருணாசலீஸ்வரர் அலங்கார ஜாவளி',

சொக்கநாதப் பிள்ளையியற்றிய ‘காந்திமதியம்மை பேரில் கும்மிப் பாடல்’, இராமலிங்க சுவாமிகளின் ‘சண்முகர் கொம்மி’, அருணாசலம் செட்டியாரின் ‘தருமர் அசுவமேதயாக அம்மானை’, குமாரசாமி முதலியாரின் ‘சுப்பிரமணியர் லாலி’ எனச் சிலவற்றை நாட்டுப்புற வடிவங்களுக்குக் காட்டாகத் தரலாம்.

இப்பக்திப் பனுவல்கள் இறைவனை இறைவனாகவே கண்டு பாடுதல் (கோதை நாயகித் தாயார் மாலை—பள்ளிகொண்டான் பிள்ளை), அவன் தலத்துடன் இணைத்து மகிழ்தல் (சிறுக்குளம் விநாயகரந்தாதி—தாமோதரம் பிள்ளை), குழந்தையாக்கிப் பார்த்தல் (சேசுநாதர் பிள்ளைத் தமிழ்—சாமிநாதப் பிள்ளை), உலா வரச் செய்தல் (சிவசுப்பிரமணியர் திருமுக உலா—கபால மூர்த்தி பிள்ளை), உலா வரும் இறைவன் மீது தலைவி காமுறல் (திருக்கோணேசர் மலைக் குறவஞ்சி—சரவணமுத்துப் புலவர்) எனப் பல நிலைகளில் காட்டுகின்றன.

இவை பொதுநிலையில் இறைவனின் புகழ் இயம்புவனவாம். அப்புகழினை, அவன் திருச் செயல்களை இயம்புதல் (மதுரைச் சொக்கேசர் வந்திப் பிட்டுக்கு மண்சுமந்த காதற் கண்ணிகள்—பழனியப்ப செட்டியார்), திருப்பெயரைச் சிறப்பித்தல் (மூத்த பிள்ளையார் துவாத நாம சங்கீர்த்தனம்—தொழுவூர் வேலாயுத முதலியார்), துதித்தல் (சிவகாம வல்லி துதி—இராமலிங்க சுவாமிகள்); வாழ்த்துதல் (கலைமகள் வாழ்த்து—இராமலிங்க சுவாமிகள்), இறைவனிடம் அடைகின்ற பேரின்பத்தை உணர்த்தல் (பேரின்பக் காதல்—வேதநாயகம் சாஸ்திரியார்); எழுந்தருளியிருக்கும் தலத்தின் மாண்பினை இயம்புதல் (பட்டீச்சரப் புராணம்—மீனாட்சி சுந்தரம் பிள்ளை), இறைவனுக்கு உகந்த நாள்களின் சிறப்பினை விளம்புதல் (ஏகாதசிப் புராணம்—வரத பண்டிதர்), விரதச் சிறப்புரைத்தல் (ஏகாதசி விரதக் கும்மி—சி. முனிசாமி முதலியார்), தொடர்புடைய ஆயுதங்களைச் சிறப்பித்தல் (வேலலங்காரம்—தண்டபாணி சுவாமிகள்), அடியவர் வரலாறு காட்டுதல் (சீமந்தனி புராணம்—ச. பூபாலப் பிள்ளை), அவதார மகிமை காட்டல் (தேம்பாவணிக் கீர்த்தனை—அருளப்ப முதலியார்), அவன் பேரருளைவியத்தல் (அருள் விளக்க மாலை—இராமலிங்க சுவாமிகள்), குருவின் மேலேற்றிக் கூறல் (குருநாத சதகம்—மஸ்தான் சாகிபு), ஆலயங்களில் நிகழும் திருவிழாக்களைச் சிறப்பித்தல் (காஞ்சிபுரம் வரதராசர் உற்சவப் பதிகம்—இராச கோபாலப் பிள்ளை), திருவடிகளைச் சிறப்பித்தல் (திருவடிப்

பத்து—அரசஞ் சண்முகனார்), வாகனங்களைச் சிறப்பித்தல் (மயிற் பத்து—வே. அகிலேசபிள்ளை), பிரசாதங்களின் பெருமை பகர்தல் (விபூதி பிரசாத மகிமை—ச. மு. கந்தசாமிப் பிள்ளை) எனப் பல நிலைகளில் அமைக்கக் காணலாம்.

இறைவன் புகழ்பாடும் பழங்கதைகள் மிகுதியான இடத்தைப் பெறுவதும் இவண் கூறத்தக்கது. சதமுக ராவணன் கதை—ஆறுமுக முதலியார், ஆதாமேவாளின் விலாசம்—இயாக்கோப்பு சாமுவேல் என்பன போன்று அவை அமைகின்றன.

இவை இறைவனைப் பாடுவதுடன் இறையடியார்களையும் சிறப்பித்துப் பாடுகின்றன. மீனாட்சிசுந்தரம் பிள்ளையின் 'மதுரைத் திருஞான சம்பந்த சுவாமிகள் ஆனந்தக் களிப்பு', இலாட்டன் என்பாரின் 'தாமசுரி பெய்ரோவின் மகன் ஆல் பர்ட்டைப் புகழும் தாராட்டு', மஸ்தான் சாகிபின் 'முகியித்தீன் சதகம்' ஆகியன சான்றாம். சைவ சமயக் குரவர் நால்வரை இவ்வகையில் சிறப்பித்தல் மிகுதியாகக் காணப்படுகிறது.

இறைவன் எழுந்தருளியிருக்கும் தலங்களைச் சிறப்பித்துப் பாடும் தலபுராணங்கள் மிகுதியாக இக்காலத்தில் எழுந்துள்ளன. சைவத் தலங்களே மிகுதிப் பெரும்பான்மையாக அமைந்து, தலபுராண மரபு சைவத்திற்கே உரியது என்று கூறும் அளவில் அமைகின்றன. மிக அருகிய நிலையிலேயே பிற மதத்தைச் சார்ந்தன அமைகின்றன (ஸ்ரீசுதரிசனகிரி புராணம்—இராமாநுச நாவலர்; நாகூர்ப் புராணம்—குலாம் காதிறு நாவலர்).

சமயத்தார் ஒவ்வொருவரும் தம்முடைய சமயமே பெரிதென ஒருவருடன் ஒருவர் நூல்களின் வாயிலாகப் பூசலிட்டுக் 'கண்டனங்' களை எழுதிக் குவித்த அதே வேளையில், சமயப் பொதுமை அல்லது பொறுமையை வலியுறுத்தித் தண்டபாணி சுவாமிகள், மஸ்தான் சாகிபு போன்றோர் பிற சமயத் தெய்வங்களையும் பாடினர். இறைவனைப் பொது நிலையாக்கி, வேதநாயகம் பிள்ளை (சர்வசமய சமரச கீர்த்தனைகள்), வே. கி. நாராயண சாமிப் பிள்ளை (சர்வசமய சமரச தோத்திரம்) போன்றோர் பக்திப் பாதையில் புதிய திருப்பத்தைக் காட்டினர்.

இறைவனிடம், உடலின் ஒவ்வொரு கூறினையும் காக்கும் படியும், உடலுக்கு ஊறு விளைவிக்கக் கூடிய அனைத்து விதமான

துன்பங்களினின்றும் காக்கும்படியும் வேண்டும் கவச விலக்கியங்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோற்றம் கொண்டன. இன்று பலரின் நம்பிக்கைக்குத் துணையாக, வழிபடு நூலாக இலங்கும் தேவராய சுவாமிகளின் கந்த சஷ்டிக் கவசம், பாம்பன் குமர குருதாச சுவாமிகளின் சண்முகக் கவசம் ஆகியன இங்குத் தோன்றியவையே.

தொல்காப்பியரின் செவியறிவுறூஉ, நெஞ்சறிவுறுத்தலாக இராமலிங்கரால் இங்கு மாறியுள்ளது. பக்திப் பாடல்களில் நெஞ்சினை விளித்துக் கூறுதல் மரபாதலினாலும், ஒருவருக்கு அறிவுறுத்தல் எனும்பொழுது செவி கேட்பினும் நெஞ்சே அதனை ஏற்றுக் கொண்டு அதன்படி நடப்பதற்குரிய காரணியாதலின் நெஞ்சறிவுறுத்தலாக மாறியது போலும்.

சமய இலக்கியங்களுள் தத்துவ நூல்களும் மலிந்திருந்தமையை வேதநாயகம் சாஸ்திரியாரின் ஞான உலா, முருகேச பண்டிதரின் தத்துவக் குறவஞ்சி, பீர்முகம்மது சாகிபின் ஞான ரத்தினக் குறவஞ்சி போன்ற நூல்களால் உணரலாம்.

### வாழ்க்கை வரலாறு

முழுமையான நிலையில் வாழ்க்கை வரலாற்று இலக்கியம் மலர்ந்த காலம் இதுவே. தன் வரலாற்றில், தண்டபாணி சுவாமி களின் 'குருபர தத்துவ நூல்' முதலாவதாக அமைகிறது. பிறர் வரலாறு காட்டும் நூல்களுள், அறிந்த வரையில் 1868இல் சோம சுந்தர அடியவரால் எழுதப்பட்ட அச்சுதானந்த சுவாமிகள் வரலாறு இவ்வகையில் முதல் நூலாக அமைகிறது. பொதுவாக, புலவர், இறையடியார், வரலாற்றுச் சிறப்புடையோர் ஆகியோர் இங்குத் தலைவராக அமைகின்றனர்.

இலக்கியப் படைப்பாளர்களின் வாழ்க்கை வரலாற்றுச் செய்தி கள் தேவை[10] என்பதன் முக்கியத்துவம் உணரப்பட்ட காலமும்

10. "Our interest in the writing of any great author being once aroused, the desire will inevitably be stimulated to learn something of the man himself, as a man, beyond that which his work reveals to us we shall be curious to see him in the social surrounding in which he lived and in his daily converse with his fellows; to know the chief facts of his outward history-his ambitions, struggles, successes, failures-and the connection of his books with these; the way in which and the conditions under which

இதுவாகும். தமிழகத்திற்கு மட்டுமின்றி உலகே பயன்கொள்ளும் வகையில், இலக்கியம் கண்ட பெருமைக்குரியோரின் இயற்பெயர் கூட அறிய இயலாத நிலையில் நின்ற புலவர் பலரின் வரலாறு களைக் காணும் முயற்சிக்கு வித்திடப்பட்டது. இதனால் பல புலவர் வரலாறுகள் எழுந்தன. அவற்றுள் சதாசிவம் பிள்ளையின், 'பாவலர் சரித்திர தீபகமும்'[11] தண்டபாணி சுவாமிகளின், 'புலவர் புராணமும்' குறிப்பிடத்தக்கன.

நூலாசிரியருக்குப் பல நூற்றாண்டுகட்கு முற்பட்ட புலவரின் வரலாற்றை முழுமையாக இயற்றுதலோ, ஊகங்களுக்கு இடமின்றி எழுதுவதோ அரிதான செயலாகும். எனவே இவ்விரு நூல்களும் செவிவழிச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துள்ளன. பாவலர் சரித்திர தீபகம் பெருமளவு இலக்கியச் சான்றுகளின் துணையுடன் அமைய, புலவர் புராணம் மிகுதியும் செவிவழிச் செய்திகளையே கொண்டுள்ளது. முன்னது உரைநடை வடிவமும் பின்னது செய்யுள் வடிவமும் பெற்றுள்ளன.

புலவர் வரலாறுகள் பல தனித்த நிலையிலும் தோன்றின. மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் திருப்பனந்தாள் ஸ்ரீகுமர குருபர ஸ்வாமிகள் சரித்திரம், செங்குந்த சங்கப் புலவரால் இயற்றப் பட்ட ஒட்டக்கூத்தர் சரித்திரம் போன்ற நூல்கள் எடுத்துக் காட்டாகும். இக்காலக் கட்டத்தில் வாழ்ந்த இராமலிங்க சுவாமிகள் பற்றி, அவரை நன்கறிந்த ச. கு. கந்தசாமிப் பிள்ளை 'வள்ளலார் வரலாறு' எனும் நூல் படைத்தார். அருணாசலக் கவிராயர், ஆறுமுக நாவலர் சரித்திரத்'தை ஆக்கினார். பிறவற்றைக் காட்டிலும் இத்தகு நூல்களில் வரலாறு விளக்க மாகவும் தெளிவாகவும் அமைய முடிகிறது.

---

such books were written, his intellectual habits and methods of works".
—William Henry Hudson; An Introduction to the study of literature; 1970; p. 22.

11. இலங்கையில் வாழ்ந்த சைமன் காசிச் செட்டி என்பவர் தமிழ்ப் புலவர் என்னும் பெயரில் ஆங்கில நூலொன்றை (Tamil Plutarch) 1859இல் வெளியிட்டார். இதனைச் சதாசிவம் பிள்ளை மொழிபெயர்த்தும், பிற்காலத்துப் புலவர் வரலாறு களை இணைத்தும் 1886இல் பாவலர் சரித்திர தீபகம் எனும் பெயரில் வெளியிட்டார். இந்நூல் மீண்டும் 1975இல் பொ. பூலோகசிங்கம் என்பாரின் குறிப்புரையுடன் கொழும்புத் தமிழ்ச் சங்கத்தாரால் இலங்கையில் வெளியிடப் பட்டுள்ளது.

பொதுமக்களிடையே செல்வாக்குப் பெறுதற்கு ஒவ்வொரு சமயத்தவரும் தம் சமயம்சார்ந்த பக்தர்களின் வரலாறுகளை அவர் களது தெய்வீக வாழ்க்கைப் புலப்படும்படியாக, இறைவன் அடியவர்க்கு அருளும் திறன் விளங்கும்படியாகப் படைத்தனர். இவ்வகையில் எழுந்த நூல்களில் பக்தி மணம் கமழ்தல் இயற்கை. ஆருணாசல முதலியாரின் 'திருத்தொண்டர் சரித்திரம்', சாமிதாஸ் பிள்ளையின் 'அய்யாப் பிள்ளையின் மெய்யான சரித்திரம்', அப்துல் காதரின் இரத்ன முகமது கவன சரித்திரம்' போன்றன இவ்வகையில் எழுந்த நூல்களாகும்.

வரலாற்றுச் சிறப்புப் பெற்றவர்களின் வரலாறுகள் பல, மாணாக்கருக்கு உதவும் நோக்கத்துடன் எழுந்தன. திருச்சிற்றம் பலம் பிள்ளையின் 'அக்பர் சக்கரவர்த்தி', 'எட்வர்ட் அரசர் வரலாறு' போன்றன சான்றுகளாம்.

நீதி புகட்டுதல், ஒழுக்கங் கற்பித்தல், பக்தி வளர்த்தல் என்னும் நோக்கில் வரலாறுகள் எழுந்தமையால் பெரும்பான்மை, அவை, ஒருதலைச் சார்புடன் அமைந்துள்ளன. நடுநிலையினின்று வரலாற்று நாயகரின் வரலாற்றை ஆராய்ந்து, காய்தல் உவத்த லின்றி வெளியிடும் மரபு இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தான் ஆரம்பமாயிற்று. இதுபோன்ற குறைபாடுகள் ஒரு புதிய முயற்சியின் தொடக்கத்தில் நிகழ்தல் இயல்பாகும்.

முதல் தன் வரலாறான 'குருபர தத்துவ நூல்' செய்யுள் வடிவம் கொண்டது. வரலாற்றுச் சருக்கம் முதல் சமயாதீதச் சருக்கம் ஈறாக 29 சருக்கங்களில் 1240 பாடல்கள் உள. பாயிரத் துடன் துவங்கி வாழ்த்துடன் முடிந்துள்ளது.

நூலாசிரியர் தண்டபாணி சுவாமிகள் தம் வாழ்வை இறைவழி பாட்டில் கழித்தவராதலின் இதனுள் இடம்பெறும் செய்திகள் பெரும்பாலும் வழிபாட்டிற்காகப் பல தலங்களுக்குச் சென்றது, அங்குக் கிடைத்த இறையனுபவங்கள், இறைவன் அவ்வப்போது தனக்குக் காட்சியளித்தமை, உரையாடியமை போன்றனவாக உளது.

தன்னால் இயற்றப்பட்ட அருட் செயல்களையும் பரவலாகக் காட்டிச் செல்கிறார் (மழை பெய்யப் பாடியது—புதுவைச் சருக்கம்; பாம்பின் விடந்தீரப் பாடியது—குமாரபுரிச் சருக்கம்).

உடன் வாழ்ந்த புலவர்களுடன் கொண்ட தொடர்புகளையும் ஆங்காங்கே அறியவியலுதலும் குறிப்பிடற்பாலது. மாம்பழக் கவிச் சிங்க நாவலருடன் உறவாடியதைப் பழனிச் சருக்கத்துள்ளும், ஆறுமுக நாவலரைக் கண்டதைச் சென்னைச் சருக்கத்திலும், வடலூராருடன் பழகியதைப் புதுவைச் சருக்கத்திலும் காணலாம். இவை அப்புலவர் பற்றியும் அறிய உதவுகின்றன.

புலவராதலின் தம்முடைய படைப்புகள் எழுந்த சூழலையும் இயல்பினையும் எடுத்துக் காட்டுகிறார். சான்றாகத் திருச்செந்தூர்ப் பிரபந்தங்கள் பதினாறும் அரங்கேறியமையைத் திருச்செந்தூர்ச் சருக்கத்துள் விரிவாகக் காணலாம். வரலாற்றிற்கு முக்கியமான காலக் குறிப்புகள் சரிவரக் குறிக்கப்படாத போதிலும் நிகழ்ச்சிகளைத் தெளிவாக விளக்கிச் செல்கிறார்.

பக்தி போன்று இந்நூலிற்கும் பயன் இறுதியில் கூறியிருப்பதும் நவிலற்பாலது. ஒவ்வொரு சருக்கத்தின் இறுதியிலும் தான் இதுவரை கூறியதென்ன இனிக் கூறப்போவது என்ன என்பது பற்றிக் கூறுகிறார். காப்பிய மரபில் இந்நூலைப் படைத்திருப்பதும் சுட்டத்தக்கது.

கிறித்தவக் கம்பர் கிருஷ்ண பிள்ளை 1893இல் எழுதிய ‘பாளையங்கோட்டை எச். ஏ. கிருஷ்ணபிள்ளை கிறிஸ்தவனான வரலாறு’ எனும் நூல் தன் வரலாற்று நூல்களில் முதன்மையானது என்றும் 19ஆம் நூற்றாண்டில் தமிழில் தோன்றிய ஒரே தன் வரலாற்று நூல் இஃது என்று கருதலாம் என்றும் நுவல்வர் அதன் பதிப்பாசிரியர்.[12]

ஆயின் குருபரதத்துவ நூல் 1882இல் இயற்றப்பட்டமை நூலாசிரியரால்,

> தாவில் கலியுகத்து ஆண்டு ஐயாயிரத்துட்
> பதினேழு தள்ளித் தோன்றும்
> மாவிசுவிற் புரட்டாசித் திங்கள் பத்தாம்
> தேதி, திரவாரத்(து) அத்தம்
> மேவிய நாள், வேதாந்த சித்தாந்த
> சமரசமே விளக்கும் மார்க்கம்
> மூவிரண்டும் களிகூரும் குருபரதத் துவத்
> திருநூல் முடித்திட்டேனே

எனக் குறிக்கப்பட்டிருப்பதால் இதுவே முதல் நூல் என்பது வெளிப்படை.

---

12. ஞானசிகாமணி, வீ; 1978, ப. 2.

உரைநடை அமைப்பிலேயே அந்நூல் முதலில் தோன்றியுள்ளது எனலாம். மற்றும் தன் வாழ்வின் ஒரு நிகழ்ச்சியையே அது முதன்மைப்படுத்தி மொழிந்து முழுமை பெறாமையும் நோக்கத் தக்கது.

பயணம்

பத்தொன்பதாம் நூற்றாண்டைப் பெருமைப்படுத்தும் பொருள்களுள் இதுவும் ஒன்றாம். இது இலக்கிய இன்பத்துடன் பொது அறிவும் நல்கும் பெருமையுடையது,

இரயில், கப்பல், விமானம் எனச் சிறிது சிறிதாகப் போக்கு வரத்து வாய்ப்புகள் மிகத் தொடங்கிய நிலையில் அவற்றில் பயணம் செய்தோர் அப்பயணத்தின்போது தாம் அடைந்த அனுபவங்களைச் சுவைபட விவரித்துள்ளனர். பெரும்பாலும் அவை சிறு கவிதைகளாகவும் கட்டுரைகளாகவுமே உள்ளன. அவற்றை ஏ. கே. செட்டியார் 'தமிழ்நாடு (பயணக் கட்டுரைகள்)' எனும் நூலுள் தொகுத்தளித்துள்ளார்.

பயணம் செய்த ஊர்தியில் கிடைத்த அனுபவம் (ரெயிலில் பிரயாணம் செய்தது—ஜநாநந்தினி, டிசம்பர் 1891), குறிப்பிட்ட இடத்தைப் பற்றிய செய்திகள் (சென்னை மாநகர் கடற்கரை—வி. கோ. சூரியநாராயண சாஸ்திரி—ஞானபோதினி—பிப்ரவரி, 1900), துணுக்குகள் போன்று தம் பயண அனுபவங்களில் ஏதேனும் ஒன்றை மட்டும் உணர்த்துதல் (லண்டன் பாரீஸ் நகரங்களின் வினோத சரித்திரம்—ஜி. பரமேஸ்வரம் பிள்ளை, 1899) என ஏதேனும் ஒரு கூறு மட்டும் சிறப்பித்தல் சிலவற்றில் காணப் படுகிறது.

பார்த்துக் களித்த இடத்தின் இருப்பிடம், செல்லுமுறை இயற்கைச் சூழல், சிறப்பு, வரலாற்றுச் செய்திகள், வழக்குக் கதை கள், அறிந்த பிற குறிப்புகள் முதலானவற்றைத் தம் அனுபவத் துடன் தரும் போக்கினை முன் சுட்டியுள்ளவற்றின் வளர்ச்சி நிலை யாகக் கொள்ளலாம். இதனை, திருச்சிராப்பள்ளி மலைக் கோட்டை (ஏ.வி.ஏ—விவேகசிந்தாமணி, மார்ச், 1878), கோயம்புத்தூருக்குப் போய்வந்தது (சி. வி. சுவாமிநாத ஐயர்—விவேக சிந்தாமணி, சூன், 1899) போன்ற கட்டுரைகள் எடுத்துக் காட்டும்.

இக்கட்டுரைகளின் வளர்ச்சி நிலையாக நூல்கள் அமைகின்றன. 1899இல் வெளிவந்த சேலம் பகடாலு நரசிம்ம நாயுடுவின் ''ஸ்ரீ ஆரியர் திவ்ய தேச யாத்திரை சரித்திரம்' முதல் பயண விலக்கியமாக அமைகிறது.

''இந்த இகலோக யாத்திரையில் உத்தேசமெல்லாங் கூடி தேக சுகத்தையும், மனோவிஞ்ஞான விருத்தியையும், ஆத்மோன்னத ஸ்திதியையும், தெய்வ பக்தியையும் விருத்தியாக்குங் காரணமா யிருத்தலால் இதற்குத் திவ்ய தேச யாத்திரையென்று சொல்லப் பட்டது'' என்று ஆசிரியர் நூன்முகத்தில் கூறியிருப்பது நூலின் தன்மையை ஓரளவு புலப்படுத்துவதாக இருக்கிறது.

''முதல் காங்கிரஸ் சபை'' பம்பாயில் (1885, டிசம்பர்) கூடிய போதும், ''இந்து ஜன சமூக மகா சபை'', ஆங்கிலேயர் ஆட்சியில் மேலும் சில உரிமைகளைப் பெற எண்ணிக் கல்கத்தாவில் (1886, டிசம்பர்) கூடியபோதும், அவற்றிற்குக் கோயம்புத்தூரின் பிரதிநிதியாக, கலாநிதி இதழின் ஆசிரியரான, இந்நூலாசிரியர் சென்றபோது கிடைத்த அனுபவங்கள் இதன் பொருளாகின்றன.

பயணம் செய்ய முடிவெடுத்தது முதலாகத் தம் எண்ணங்களை யும், நிகழ்வுகளையும் விளக்கிச் செல்கிறார். பயணத்தின்போது ஏற்படும் வழிநடை இடர்கள், உரையாடிய பெரியவர்கள், பார்த்த இடங்களின் விரிவான வருணனை, வரலாற்றுக் குறிப்பு, சிறப்புச் செய்திகள், தமது செயல்கள், காட்சிகள் முதலானவற்றுடன் பூகோளம், தொழில் பற்றிய விரிந்த விளக்கங்களும் தருகிறார். சமயம் பற்றிய செய்திகளுக்கு மிகுந்த முக்கியத்துவம் நல்கும் ஆசிரியர் பார்த்த இடங்களின் தலபுராணங்கள் (காசி. ப. 28), வாழ்ந்த பெரியோரின் வரலாறு (ஹரிதாசர், ப. 220), ஆண்டு தோறும் நிகழும் விழாக்கள் (ப. 237), இறைமகிமை, (ப. 32) ஆகியவற்றை இயன்றவிடங்களிலெல்லாம் சிறப்பித்துள்ளார். தான் செய்த வழிபாடுகளைக் கூட விடாது தந்துள்ளார் (ப 23).

நேரம், காலம், தேதி குறிப்பிட்டுத் தம் கால உணர்வைக் காட்டும் ஆசிரியர், கற்பனை உரையாடல்களால் (பக் 69-74) இலக்கிய இன்பமும் தருகிறார். ஒவ்வொரு இடத்திற்கும் செல்லு முறை, தங்குமிடம், ஆகக் கூடிய செலவுகள் முதலானவற்றையும் தந்து அங்குச் செல்ல விரும்புவாருக்குப் பயன்தரக் கூடியதாக அமைத்துள்ளார். தம் பயண நோக்கின் நிறைவேற்றத்தையும் ஆங்காங்கே உணர்த்தியுள்ளார்.

நூலின் ஆரம்பத்தில் 'வடதேசத்தில் யாத்திரைச் செய்ய விரும்புவோருக்குச் சில விசேஷக் குறிப்புகள்', 'புகைவண்டி முதலானதுகளில் ஏறுவோருக்கு சில விசேஷக் குறிப்புகள்' என அமைத்துள்ளமை பயணம் செய்வாருக்குப் பயனுடையதாக அமைகின்றன. இவரது பயணக் குறிப்புகள் முதலில் கலாநிதி இதழில் வெளியிடப்பெற்று பின்பே நூலுருவம் பெற்றுள்ளன.

'காசியாத்திரை விளக்கம்' என்னும் மயில்வாகனப் புலவரின் நூல் வெளிவராது ஏட்டளவிலே நின்றுவிட்டது. அந்நூலுள் ஆறுமுக நாவலரும் அவரது தமையனாரும் இயற்றிய கீர்த்தனைகள் உள என்றும், நூல் நொண்டிச் சிந்தாக அமைந்தது என்றும் உரைப்பர்.[13]

சமுதாயம்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றி இருபதாம் நூற்றாண்டில் செழித்தோங்கி நிற்கும் பொருட்களுள் இதுவும் ஒன்றாம். சமுதாயச் சிக்கல், சமுதாயச் சீர்திருத்தம் எனும் இரு நிலைகளில் இதனை அணுகலாம்.

கதிர்வேல் கவிராயர், குடும்பத்தை அழிக்கின்ற, அழிக்கக் கூடிய சிக்கல்களை மையமாகக் கொண்டு அவற்றின் தீமை புலப்படும் வகையில் சில மாலைகளை இயற்றியுள்ளார். வரவுக்கு மீறிச் செலவு செய்பவர்களை எதிர்த்து, 'டம்பாச்சாரியார் மாலை' யும், வட்டிக்குக் கடன் கொடுப்போரை எதிர்த்து, 'டிஸ்கவுண்ட் மாலை'யும், குடித்துக் குடித்துக் குடும்பத்தைப் பாழ் பண்ணுகின்ற குடியர்கள் மீது 'குடிகேடர் மாலை'யும் பாடியுள்ளார்.

ஈழத்தைச் சார்ந்த வே. இராமலிங்கம் எழுதிய 'கோட்டுப் புராணம்', நீதித்தலம் சென்று நீதிகேட்போராகிய வாதி, பிரதி வாதிகளுக்கு நேரிடும் பண இழப்பு, துன்பம், இவர்களுக்கிடையே செயல்பட்டு இருவரிடமும் பணம் பறிக்கும் உண்மையற்ற வழக்கறிஞர்களின் தந்திரங்கள் முதலானவற்றை விரிவாகக் கொண்டது.[14]

பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் நாடகாசிரியர் தம்மைச் சுற்றியுள்ள சமுதாய மக்களை உற்று நோக்கலாயினர்.

13. இரத்தினம், கா. பொ; இலங்கையில் இன்பத் தமிழ்; 1956; ப. 50.
14. சதாசிவம் பிள்ளை, அ; பாவலர் சரித்திர தீபகம்; 1975; ப. 177.

சமுதாய வீதியில் அவர்கள் கண்ட நிகழ்ச்சிகளை நாடகமாக்கத் தலைப்பட்டனர். 1857இல் நடிக்கப்பட்டு 1867இல் அச்சேறிய 'டம்பாச்சாரி விலாசம்' முதல் சமூக நாடகமாகும். முத்துக் குட்டிப் புலவரால் எழுதப்பட்ட, 'தேவசகாயம் பிள்ளை வாசகப்பா' சமயக் காழ்ப்பால் விளைந்த தீமைகளைக் காட்டுவ தாகும்.

இங்குச் சமுதாயச் சீர்திருத்தத்திற்காக மிக அதிகமாக நினைக்கப்பட்டவற்றுள் முதன்மை வாய்ந்தது பெண்கள் முன்னேற்றமாகும். குழந்தைமணம், இளம் விதவை, பெண்ணடிமை போன்ற கொடுமைகளிலிருந்து பெண்களை மீட்டு ஆண்களுக்கு நிகராகக் கல்வியறிவு கொடுத்து முன்னேற்றுவதில் பலரும் முயன்றனர். இதற்காகப் பல இலக்கியங்களும் இயற்றப் பட்டன.[15]

இத்துறையில் வேதநாயகம் பிள்ளை முன்னணியில் நிற்கிறார். பெண் மதிமாலை என்னும் செய்யுள் இலக்கியத்துடன் பெண் கல்வி, பெண்மானம் எனும் உரைநடை நூல்களும் யாத்துள்ளார். தம்முடைய நீதிநூற் கருத்துகள் விளக்கம் பெறும் வகையில் பெண்மைக்கு உயர்வளித்து, 'பிரதாப முதலியார் சரித்திரம்' எனும் புதினத்தைப் படைத்துள்ளமையும் குறிப்பிடற்பாலது. பெண்களிடம் இருக்கவேண்டிய பண்புகள், ஒழிக்கப்பட வேண்டிய மூட நம்பிக்கைகள், பெண் கல்வி பெறுவதால் அடையும் உயர்வு கள், ஆடவர்க்கு உறுதுணையாக அமையும் விதம் எனப் பல வாறாகப் பெண் முன்னேற்றத்திற்கு முயன்றுள்ளார்.

வேங்கடாசாரியாரின், 'விவேக விளக்கம்', நரசிம்மலு நாயுடுவின், 'பெண் வர்க்கத்தின் வரலாறும் அதன் தத்துவமும், (1883), இராமசாமிச் செட்டியாரின், 'பெண்பிள்ளைத் தாலாட்டு', சி. முனிசாமி நாயுடுவின், 'பதிவிரதைகள் சரித்திரம்', இராமலிங்கம்

---

15. "All the progressive writers of the 19th Century wanted to emancipate Hindu Women and felt disgusted with child wives and child widows. Their inferior status, their early marriage and their difficulties were documented clearly by these writers"

—Subramanian, P; Tamil Literature in the nineteenth Century—A Sociological Study; Journal of Tamil Studies-13; June 1978; p. 91.

பிள்ளையின், 'மாதர் நீதி அம்மானை', அமிர்தம் பிள்ளையின் 'பெண்மை நெறி விளக்கம்' முதலியனவும் இவண் குறிப்பிடற் பாலன.

கோபாலகிருஷ்ண பாரதியாரின் 'நந்தனார் சரித்திரக் கீர்த்தனை' சமுதாயச் சீர்திருத்தத்திற்கு உதவியாக நில உடைமைப் போக்கை எதிர்த்து எழுந்தது என்பர்.[16]

இங்குக் குறிப்பிட வேண்டிய மற்றொன்று சாதிகள் பற்றிய நூல்களாகும்.[17] அவை புராண நூல்களாகவும், நாடகங்களாகவும் கனிந்துள்ளன. தங்கள் சமூகத்தின் சிறப்பினை, முதன்மையினை நிலைநாட்டுவதாக இவை அமைகின்றன. வல்வை ச. வயித்திய லிங்கம் பிள்ளை, 'சாதி நிர்ணய புராணம்' எனும் நூலெழுதி யுள்ளார். அது பல்வேறு சாதிப் பிரிவுகளின் நிர்ணயத்தில் ஈடு பட்டுள்ளது. நெ. அங்குசாமிப் பிள்ளையின் கருணீகர் புராணச் சுருக்கம்', வீர. லெ. சின்னையச் செட்டியாரின் 'நகரத்தார் வரலாறு', முத்தப்ப செட்டியாரின், 'செட்டிமார் வரலாறு' போன்ற நூல்களும் இதன்பாற்படுவன.

நாடகங்களின் மூலமாகவும் அவை வெளியிடப்பட்டமையை, வி. சி. கோவிந்த நாயர் 1899இல் இயற்றிய, 'ஒட்ட நாடகம்', சுப்பிரமணிய முதலியார் இயற்றிய 'சோகி நாடகம்', கிருஷ்ண சாமி செட்டியார் இயற்றிய, 'காராளர் கார்காத்த நாடகம்' போன்றவை உணர்த்துகின்றன. இவை முறையே ஒட்டர், சோகிகள், வேளாளர் ஆகியோரின் பண்புகள், பழக்க வழக்கங் களின் சிறப்பினைக் காட்ட எழுந்தவையாகும்.

---

16. சிவஞானம், ம.பொ; விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு; 1970; ப. 36.
17. "Many lower castes in order to gain social status and position invented even mythological stories to prove that, they were higher castes. This tendency was very common among the Shānars of the Tamil Country during the period under Survey (Eg. Nana muthu Natar Canarkalum Cathiriyarkale). Similarly many other lower castes like Vanniyas, Balijas, Chettis, Kaikkolas, Vellalas and their own caste books in priase of their own castes with a claim of superiority over the other castes".

—Subramanian, P; Tamil Literature in the nineteenth Century—A sociological study; Journal of Tamil Studies-13; June 1978; p. 90.

### மொழி

சங்கம் முதல், புலவர்கள் தம் படைப்புகளில் தாய்மொழியின் சிறப்பினை நவின்றிருப்பினும் அதற்கென்று தனித்த நூல்களைப் படைத்து அதனை முதன்மைப்படுத்திச் சிறப்பித்தது இந் நூற்றாண்டேயாம். இப்புகழினைப் பெற்றுத் தருபவர் தண்டபாணி சுவாமிகள். தமிழலங்காரம், முத்தமிழ்ப் பாமாலை, தமிழ் விரும்பும் தெய்வம் இன்றித் தவித்த பதிகம், தமிழைத் துதித்த பதிகம் போன்ற பல நூல்களால் தம் தமிழ்ப் பற்றைப் புலப்படுத்துகிறார். மொழியின் பெருமையை விளக்குமுகமாகத் தமிழ்ப் புலவர் தம் இலக்கியச் சிறப்பினையும் பகருகின்றார்.

இவர் வகுத்துள்ள அறுவகையிலக்கணம் எனும் நூலுள் ஆறாவது இலக்கணம் புலமையிலக்கணமாகும். அதனுள்ளும் தமிழ்ப் புலவோர் சிறப்பே பலவாறாக இயம்பப் பட்டிருக்கின்றது. சிறந்த பக்திப் புலவராக எண்ணற்ற நூல்களை ஆக்கித் தந்துள்ள போதிலும் அவற்றுள்ளும் மொழிப்பற்று இரண்டறக் கலந்து நிற்கக் காண்கிறோம்.

### அரசியல்

1849இல் கே. கோபாலாச்சாரியால் இயற்றப்பட்ட 'ஆரிய சபா நாடகம்', அரசியல் பிரச்சார நாடகமாக அமைந்துள்ளது. இந்நாடகம், இந்தியக் காங்கிரஸ் அக்காலத்தில் பெற்ற வெற்றி களைக் குறிப்பிடுகிறது[18] என்பர்.

தண்டபாணி சுவாமிகள் 'ஆங்கிலியர் அந்தாதி' என்றொரு நூலை 100 கட்டளைக் கலித்துறைப் பாக்களில் படைத்துள்ளார். இந்நூல் ஆங்கிலியர் ஆட்சியால் விளைந்த கேடுகளைச் சுட்டி அவராட்சி அகற்றும் வல்லமை படைத்த தலைவன் ஒருவனைப் படைத்துத் தருமாறு இறைவனை வேண்டுகிறது. ஆங்கில அரசாங் கத்திற்கு எதிர்ப்புக் குரலை இவரது நூல்களில் ஆங்காங்கே,

> இங்கிலீசுக்காரர் அநியாயக் கொடுமையை
> என்னென்று சொல்வேன் அம்மா.
> சப்பாத்திக் கள்ளிக்கும் தரிசுக்கும் தீருவை
> தடையறக் கொடுத்திடத் தண்டங்கள் செய்வதும்.
> (கீர்த்தனைப் பாடல் திரட்டு: 14)

என்பது போன்று காணலாம்.

---

18. சக்திப் பெருமாள்; தமிழ் நாடக வரலாறு; 1979; ப.1.12

இவர் மற்றும் அரசாட்சி நூல், அருளாட்சி நூல் முதலியனவும் பாடியுள்ளார்.

**அகம்**

அகப்பொருளின் பாற்படும் கோவை, ஒருதுறைக் கோவை, தூது, குறவஞ்சி,. காதல், மடல் முதலிய பிரபந்தங்கள் பல இங்கு எழுந்துள்ளன*.

பொருள் வரையறையற்ற கும்மி (சிங்காரக் கும்மி—சி. அப்பாவுப் பிள்ளை), கண்ணி (பாங்கிமார் கண்ணி—இராமலிங்க சுவாமிகள்), மஞ்சரி (சிங்கார ரச மஞ்சரி—மாம்பழக் கவிச் சிங்க நாவலர்), லகரி (சல்லாப லகரி—இராமலிங்க சுவாமிகள்), சிந்து (காவாதூர் லோகநாத முதலியார் பேரில் சிங்காரச் சிந்து—அரங்கசாமி நாயுடு), மாலை (இங்கித மாலை—இராமலிங்க சுவாமிகள்), பதிகம் (கைக்கிளை மறுத்த பதிகம்—தண்டபாணி சுவாமிகள்), பத்து (இங்கிதப்பத்து—இராமலிங்க சுவாமிகள்) ஆகியவற்றிலும் அகப்பொருள் காணலாம்.

பவனிக்காதல் என ஒரு பிரபந்தத்தை முத்துவீரியம் சுட்டும்[19]. உலா வந்த தலைவனைக் கண்டு காமுற்ற தலைவியின் கூற்றாகும் அது. அதனை இராமலிங்கர் தம் பக்திப் பாடல்களில் இறைவனைக் கண்டு தலைவி காமுற்று மொழிவதாக, 'பவனிச் செருக்கு', 'திருவுலாப் பேறு', 'திருஉலா வியப்பு' முதலிய பதிகங் களில் காட்டுகிறார்.

சுந்தர கவிராயர் தனிப்பாடலாகப் பல அகப்பாடல்களைப் பாடியுள்ளார். தண்டபாணி சுவாமிகள் பல அகத்துறைப் பாடல் களை வண்ணத்தில் தந்துள்ளார் (சென்னை வண்ணம்—பாங்கி யைத் தலைவி வேண்டல்).

இராமகிருட்டிணன் கவிராயரின் 'தென் சேறைத் தடாக சிங்கார மாலை' இவண் குறிப்பிடத்தக்கது. இது வடமலைத் திருவணாத சுந்தரராசப் பாண்டியர்மீது சேற்றூர் பகுதியில் உள்ள குளங்களைக் கொண்டு அகப்பொருளில் பாடப்பட்டதாகும்.

---

* — பின்னிணைப்பு (இலக்கிய வரிசை) காண்க.

19. ''காமரும் உலாவல் காட்சிபோலே
அடைந்த காமம் மிக்கால் அவற்றைப்
பிறரொடும் எடுத்துப் பேசி வருந்துதல்
பவனிக் காதலாம் பகரும் காலே''. (160)

தடாக சிங்காரம் என்பதனை, பிரபந்த வகையுள் ஒன்றாகப் 'பிரபந்தத் திரட்டு' நுவல்கிறது.[20] உலாப் போந்த அரசன் பொய்கைக் கரை வர, ஆங்கவன் கண்ட தெய்வமகள் வானில் மறைய, அவள் மேல் அவனுற்ற காதலால், இயற்கைச் சூழல் மாற்றமுற்றதாகப் பாடுதல் அதன் பொருள். இந்நூலை அதனுடன் ஒப்பு நோக்கலாம்.

புறம்

பெரும் வழக்கற்ற நிலையிலேயே இங்குக் காணப்படுகிறது. தண்டபாணி சுவாமிகளின் வீரவாகுத் தேவர் வாளலங்காரம் போன்ற ஒரு சிலவே உள.

தலைவன் ஈடுபட்ட போரையும் அவனது வெற்றிச் சிறப்பையும் கூறுவதாக அமையும் 'சண்டை நாடகம்' எனப்படும் நாடக வகையினை இதன்பாற்படுத்தி எண்ணலாம் (இரங்கூன் சண்டை நாடகம்—இராமச்சந்திரக் கவிராயர்).

இந்நூற்றாண்டில் தோன்றிய நாடகங்கள் பலவற்றிற்குப் போரே அடிப்படைக் கருத்தாக அமைந்துள்ளமையும் குறிப்பிடற்பாலது (கிருஷ்ணகுமாரி அல்லது மீவாரின் வீழ்ச்சி—ஸ்ரீனிவாச அய்யங்கார்).

இராமலிங்க சுவாமிகள் நெடுமொழிவஞ்சி எனும் ஒரு பதிகம் பாடியுள்ளார். அதனுள், தன்னுடைய பகைவன் தான் விரும்புவதைச் செய்யாவிடில் தான் இதனைச் செய்வேன் என்று வஞ்சினம் உரைத்தல் காணப்படுகிறது. இஃது தொல்காப்பியக் காஞ்சித் திணையின் துறையாகிய வஞ்சினக் காஞ்சியுடன் இணைத்து நோக்கத் தக்கதாகும்.

அறம்

தோன்றிய காலம் தொட்டுத் தன் முக்கியத்துவத்தை உணர்த்தி வரும் பொருட்களுள் இதுவும் ஒன்று. இந்நூற்றாண்டிலும் பல அறநூல்கள் எழுந்துள்ளன.

---

20. ''மன்பவனி சோலை மலர் மலி வாவி வர
மின்னொருத்தி மின்போல் வியனெய்தக்—கன்னிக்கு
இறை மோகத்தால் ஏற்ற வெல்லாம் பாடல்
அறியும் தடாக சிங்காரம்'' (13)

இது, தாலாட்டு (நீதிநெறித் தாலாட்டு—ஈசுர மூர்த்தியா பிள்ளை), பதிகம் (அவா அறுத்தல்—ஞானசித்தர்), வெண்பா (சாணக்கிய நீதி வெண்பா—அ. குமாரசாமிப் புலவர்), அம்மானை (மாதர்நீதி அம்மானை—இராமலிங்கம் பிள்ளை), விருத்தம் (ஆத்திசூடி நீதிக்கலி விருத்தம்—கனகசபை நாயகர்), மாலை (நன்னெறிமாலை—அ. சதாசிவம் பிள்ளை), சதகம் (மனுநீதி சதகம்—வேதகிரி முதலியார்) எனப் பல வடிவங்களில் அமைந் துள்ளது.

அறக்கருத்துகளைக் கதைகளின் வாயிலாக உணர்த்துவது பெரியோர் முதல் சிறுவர் வரை அனைவருக்கும் எளிதாகவும் கேட் பதற்கு விருப்பமாகவும் இருக்குமாதலின் பல நூல்கள் இம்முறை யில் அமைந்துள்ளன. நடேச சாஸ்திரியின், 'ஈஸாப் நீதிக் கதைகள்', அ. சதாசிவம் பிள்ளையின், 'நன்னெறி கதா சங்கிரகம்' போன்றன இத்தகையனவாகும். 'நன்னெறி சத்திய பாஷ அரிச்சந்திர விலாசம்' போன்ற நாடகங்களும் இங்கு நோக்கத் தக்கன.

அறங்கூறுதலில், குறிப்பிட்ட சமயத்தின் தோய்வு இந்நூற் றாண்டிலும் இடம் பெற்றுள்ளதை, அப்துல் காதிர் புலவரின், 'அகயாத் நாமா', 'நஸிஹத்து நாமா' போன்ற நூல்களால் உணரலாம்.

பழைய அறநூல்களைத் தம் காலத்திற்கு ஏற்றவாறு விளக்கி யும், விரித்தும் நூலமைக்கும் மரபு தொடர்ந்துள்ளது. அரசஞ் சண்முகனாரின், 'திருவள்ளுவர் நேரிசை', இராமபாரதியின், 'ஆத்திச்சூடி வெண்பா' முதலியன சான்றுகள்.

பக்தி யிலக்கியத்துள் அமைந்துள்ள 'நெஞ்சறிவுறுத்தல்' பகுதி கள் அறக் கருத்துகளைக் கொண்டனவாம். அறவிலக்கியத்துள் பொதுவாக உரைக்கப்படுவன, இங்குத் தன் நெஞ்சிற்குரைப்பதாக உள்ளன.

அறநூல்கள் உரைநடையிலும் அமையக் கூடும் என்பதனைத் தண்டபாணி சுவாமிகளின், 'சத்திய வாசக'த்தால் அறியலாம்.

### படைப்பாளர்

ஒத்த காலப் புலவரைப் பாராட்டி நூல்கள் இயற்றுதல் பரவலாகக் காணப்படுகிறது. மீனாட்சி சுந்தரம் பிள்ளை, வேதநாயகம் பிள்ளையைப் போற்றிக் 'குளத்தூர்க் கோவை'

யியற்றினார். வள்ளலார் மீது தொழுவூர் வேலாயுத முதலியார், 'திருவருட் பிரகாசர் சந்நிதிமுறை' பாட, தண்டபாணி சுவாமிகள், 'வடலூரார் வருகைப் பதிகம்' பாடியுள்ளார். ஞானசித்தர் மீது அறுபதிற்கும் மேற்பட்டோர் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கது.[21]

தங்களை ஈர்த்த முற்காலப் புலவர்களைப் பாட்டுடைத் தலைவராக்கிச் சிறப்பிக்கும் பாங்கும் வெகுவாகக் காணப்படுகிறது. இவ்வரிசையில் பக்திக் கவிஞர்களே பெரும்பான்மையாக இடம் பெறுகின்றனர். மீனாட்சி சுந்தரம் பிள்ளையின் சேக்கிழார் பிள்ளைத் தமிழ், காஞ்சீபுரம் சோணாசல பாரதியாரின் அருணகிரிநாதர் ஆசிரிய விருத்தம், பூ. ஆறுமுகம் பிள்ளையின் தாயுமான சுவாமிகள் புராணம் என வருவன சான்றுகள்.

### சாற்றுக்கவி

இந்நூற்றாண்டின் பிறிதொரு சிறப்பாகச் சாற்றுக்கவிகள் அமைகின்றன. ஒரு புலவர் புதிதாக நூல் இயற்றினால் அந் நூலுக்குப் பாயிரம் அமைப்பது பண்டைக் காலத்து வழக்கம். இப் பொழுதும் அவ்வழக்கம் உண்டு.

இம்மரபு, பழைய நூல்களைப் பதிப்பித்தோரையும், தம் நூல் களைப் பதிப்பித்தோரையும் பாராட்டி நண்பர், ஆசிரியர், மாணாக்கர் முதலானோர் வரையும், சாற்றுக் கவிகளாக இந் நூற்றாண்டில் படர்ந்துள்ளது. இப்பழக்கம் இருபதின் தொடக்கம் வரை நிலவியது.

இக்கவிகளால் நூலாசிரியர், உரையாசிரியர், பதிப்பாசிரியர் முதலியோர் பற்றிய செய்திகள், நூல் பற்றிய செய்திகள், சிறப்பு கள் ஆகியவற்றை அறிய முடிகின்றது.

இராமலிங்க சுவாமிகள், மீனாட்சிசுந்தரம் பிள்ளை, பூவை கலியாணசுந்தர முதலியார் போன்றோர் சாற்றுக்கவிகள பல வழங்கியுள்ளனர்.

### சிறப்புக் குறிப்புகள்

( ) நடப்பு நிகழ்வுகள் பல இலக்கியமாக உருப்பெற்றுள்ளன. இதற்கு, சி. அப்பாவுப் பிள்ளையின், 'இண்டியா சக்கரவர்த்தினி விக்டோரியா இராசாத்தியின் திருமுடி ஜுபிலித் திருநாள்

21. இராமசாமிப் புலவர், சு.அ; தமிழ்ப் புலவர் வரிசை-7; கழகம்; பக். 45-68.

அலங்காரப் பூதம்', வேதநாயகம் பிள்ளை, 'ஈசுவர வருடத்துப் பஞ்சத்தை'ப் பாடியமை (சர்வசமய சமரசக் கீர்த்தனங்கள்-139) போன்றன காட்டுக்களாம்.

(2) எதுவும் பாடற் பொருளாக அமையும் சிறப்பினை அல்லி மரைக்காயர், நாகை வள்ளல் ஜெய்னுல்லாபி தீன்மியாவின் பங்களாவினைச் சிறப்பித்துப் பாடியுள்ள 'அல்லி மரைக்காயர் பங்களாச் சிறப்புப் பதிகத்'தால் உணரலாம். பல தனிப்பாடல் களும் இதன் பாற்படுகின்றன (தண்டபாணி சுவாமிகள்—தனிப் பாடற்றிரட்டு).

(3) சித்திரகவிகள், சிலேடை, வசை, இரங்கல் போன்றன தனிப்பாடல்களில் சிறப்பிடம் பெறுகின்றன.

(4) யாழ்ப்பாணத்தில் தலைவில்லு என்னும் ஊரில் உள்ள, அர்ச். அன்னம்மாள் மாதா கோயிலில் ரெவரெண்டு. சி. போன் சியேன் செய்த சொற்பொழிவுகளைக் கொண்டு அந்தோனீஸ். வி. எஸ். டான்ஜான் என்பவர் 'அர்ச். அன்னம்மாள் திருப்பதி பிரசங்க வியாக்கியானக் கும்மி' ஒன்று பாடியுள்ளார். வீர. லெ. சின்னையச் செட்டியாரின் சொற்பொழிவுகள் நூலுருவம் பெற் றுள்ளன. கெ. என. சிவராஜ பிள்ளை என்பார் 1898இல் திருவனந்தபுரத்தில் செய்த சொற்பொழிவு (தமிழ்க் கவிவாணருக்கு ஒரு விண்ணப்பம்) அவரின் கம்பராமாயண கௌஸ்துபம் எனும் நூலுக்கு முன்னுரையாக அமைந்துள்ளது. அது கவிதை பற்றிய ஆய்வாக அமைந்திருப்பது குறிப்பிடற்பாலது. தமிழிலக்கியத்தின் குறைபாடுகளை மிகத் தெளிவாகக் கற்பார் யாவரும் ஏற்கும் வண்ணம் அதில் தம் ஆய்வுரையாக வழங்கியுள்ளார். இருபதாம் நூற்றாண்டில் சொற்பொழிவுகள், உரைநடையிலக்கியமாக வளர்ந்துவரல் சுட்டத்தக்கது.

(5) தொகை நூல்களை உருவாக்குவதில் புலவர்கள் கவனம் செலுத்தினர். பாண்டித்துரைத் தேவர், 'பன்னூற் றிரட்டு', 'சைவ மஞ்சரி', 'துதி மஞ்சரி' முதலானவற்றைத் தொகுத்தார். தனிப்பாடற்றிரட்டின் பின் பாடப்பட்ட பாடல்களையும் தொகுத்து, அதனுடன் இணைத்து 'தனிச் செய்யுட் சிந்தாமணி' எனும் பெயரில் கருப்பையாப் பாவலர் வெளிப்படுத்தினார். எம். எஸ். பூரணலிங்கம் பிள்ளை 1896இல் 'வாசகத் திரட்டு' என்ற பெயரில் பல கதை, கட்டுரைகளைத் தொகுத்து வெளியிட்டார்.

(6) முன்தோன்றிய இலக்கியங்கள், அறவிலக்கியங்கள் போன்று மறு ஆக்கம் பெற்றுள்ளமை மிகுதியாகக் காணப்படு கிறது (சீறா அம்மானை—அப்துல் காதிர், தேம்பாவணிக் கீர்த்தனை—அருளப்ப முதலியார்). எளிமைப்படுத்தும் போக்கே இதற்கு முக்கியக் காரணமாகும்.[22] இராமாயணம் மிக அதிகமாக, பல வடிவங்களில் பலரால் பாடப்பெற்றுள்ள சிறப்பைப் பெறு கிறது. அடுத்த நிலையில் மகாபாரதம், கந்தபுராணம் ஆகியன அமைகின்றன. பெரிய புராணம் கீர்த்தனை கவிஞரால் பெரிதும் சிறப்பிக்கப்பட்டுள்ளது. முழுநிலையில் மூவராலும் (இராமசாமி ஐயர், சிதம்பர பாரதியார், கேசவ முதலியார்) தனித்தனி நாயன்மார் கதைகளாகப் பலராலும் (அமர்நீதி நாயனார் சரித்திரக் கீர்த்தனை—வயித்தியலிங்காச்சாரி; இயற்பகை நாயனார் சரித்திரக் கீர்த்தனை—கோபால கிருட்டிண பாரதியார்) பாடப் பட்டுள்ளது.

## இலக்கிய வகைகள்

இந்நூற்றாண்டில் அதிக அளவில் எழுந்த இலக்கிய வகை களாக, பதிகம், மாலை, நாடகம், தலபுராணம் மற்றும் தனிப் பாடல்கள் ஆகியன காணப்படுகின்றன.

இவற்றுள்ளும் முதல்நிலையில் நிற்பது பதிகமாகும் (1237). மிக எளிய வடிவம்; தம் ஊரைச் சிறப்பிக்க எண்ணிய புலவர் ஊருடன் இணைத்து இறைவனையும் பாடுதற்கு ஏற்புடைத் தானமை முதலியன இதன் மிகுதிக்குக் காரணங்கள் எனலாம் மிக அதிகமான பதிகங்கள் பாடியவர் தண்டபாணி சுவாமிகள். இவர் தலந்தோறும் சென்று பாடியமையும் ஓர் ஊரினைப் பாடும் பொழுது அதில் உள்ள தெய்வங்கள் அனைத்திற்கும் தனித்தனியே பாடியமையும் இச்சிறப்பினைப் பெற்றுத் தந்தது.

அடுத்தபடியாக மாலையிலக்கியம் (374) அமைகிறது. இதனுள் சிறப்பு வாய்ந்தவராக இராமலிங்க சுவாமிகள் அமைகிறார்.

---

22. ''இளங்கோ வடிகள் இழைத்த பெருநூலின்
வளங் காணேன் பாலர் வருந்தா துளங் கொள்ளச்
செய்தேன் அது சுருக்குச் சீரியர்கள் தாம் இதனை
நொய்தா நினைந்து இகழார் நொந்து''
—ஸ்ரீநிவாஸாசாரியார்; கோவல வெண்பா; அவையடக்கம்.

பதிகம், மாலை போன்றவற்றில் அவற்றின் உட்பிரிவுகளாக இரட்டையாசிரியப் பதிகம். சிலேடைப் பதிகம், தாண்டக மாலை, அடைக்கல மாலை எனப் பல அமைகின்றன.*

**327** நாடகங்கள் தோன்றி, பத்தொன்பதாம் நூற்றாண்டுள் அது தன் முக்கியத்துவத்தை நிலைநாட்டியுள்ளது. பல நூற்றுக் கணக்கான நாடகங்கள் இயற்றப்பட்டு அவை புற்றீசல்கள் போலக் குறைந்த கால அளவே வாழ்ந்து மறைந்தும் உள்ளன.

''கல்வி கற்ற மக்கள் நாடகங்களை நல்ல பொழுதுபோக்குக் கருவிகளாகக் கருதினர். அவர்களுடைய படைப்பாற்றலை வெளி யிடவும் நாடகம் நல்ல வாய்ப்புத் தந்தது. கிறித்தவர்களும் இசுலாமியர்களும் தங்கள் சமயங்களை வளர்க்க இலக்கியங்களை அவை எந்த வடிவில் அமைந்திருந்தாலும் விடாது நாடினர். இதனைக் கண்ட சைவர்களும், வைணவர்களும் தங்கள் கருத்துக் களை நேரடியாக மக்கள் மன்றத்திற்கு எடுத்துச் செல்லத் தகுந்த கருவியாகிய நாடகங்களையே நாடினர்'' என்று இதன் மிகுதிக்குக் காரணம் கற்பிப்பர்.[23]

''குறிப்பிட்ட ஒரு பாத்திரத்தின் புகழைச் சிறப்பிக்கும் நாடகம் விலாசம்; இடையிடையே வசனங்கள் விரவப் பெற்றன வாசகப்பா; நாடகத் தலைவரின் வரலாற்றைப் பிறப்பு முதல் இறப்புவரை காட்டுவன சரித்திரப்பா; நாடகத் தலைவன் ஈடுபட்ட போரையும் அவனது வெற்றிச் சிறப்பையும் கூறுவது சண்டை நாடகம்; அவன் மணம் செய்துகொண்ட நிகழ்ச்சியை விளக்குவது மாலையிட்ட நாடகம்'' என்றும் பகுத்துரைப்பர்.[24]

இந்நூற்றாண்டிலும் முந்திய நூற்றாண்டிலும் ஈழ நாட்டுப் புலவரே நாடக நூல்கள் இயற்றுவதில் முன்னணியில் நின்றுள் ளனர். நாவலர் பெருமானுடைய தந்தையாராகிய கந்தப்பிள்ளை இருபது நாடகங்களுக்கு மேல் இயற்றியுள்ளார்[25] என்பர்.

இந்நாடகங்கள் பெரும்பாலும் வாய்மொழியாக வழங்கி வந்த வழக்குக் கதைகளாகவும், புராண, இதிகாசக் கதைகளாகவும் அமைந்துள்ளன. குறிப்பிட்ட சில கதைகள் மீண்டும் மீண்டும் சிறு

* — பின்னிணைப்பு (இலக்கிய வரிசை) காண்க.
23. சக்திப் பெருமாள்; தமிழ் நாடக வரலாறு, ப. 197.
24. மேற்படி, ப. 199.
25. இரத்தினம், கா.பொ; இலங்கையில் இன்பத் தமிழ், ப. 47.

சிறு மாற்றங்களுடன் பலரால் எழுதப்பட்டமையும் காண முடிகிறது. சான்றாக அரிச்சந்திரன் கதையைப் பதின்ஒன்மர் எழுதிச் சிறப்பித்துள்ளமையைக் குறிப்பிடலாம்*. மகாபாரதமும் இராமாயணமும் முறையே அதிகமான வரவேற்பைப் பெற்ற பொருட்களாகக் காணப்படுகின்றன.

தன் வளர்ச்சியின் உச்சநிலையைத் தலபுராணம் கண்டது இந்நூற்றாண்டாகும். தலபுராணங்களின் தனிப் பற்றாளராக மீனாட்சி சுந்தரம் பிள்ளை காட்சியளிக்கிறார். ஊர்ச்சிறப்பினைப் போற்றவேண்டும் என்ற எண்ணத்தின் விளைவே இவற்றின் மிகுதிக்குக் காரணம் எனலாம். இதனைக் கீர்த்தனை வடிவில் சுப்பிரமணிய ஐயரும் (திருமெய்யம் ஈசுவரன் கோயில் தலபுராணக் கீர்த்தனை); கிருஷ்ண ஸ்வாமி தாஸரும் (நூற்றெட்டுத் திருப்பதி ப்ரபாவ கீர்த்தனைகள் பாடியுள்ளனர்.

புராணங்களில் வழங்கப்பெறும் பெயருடன் வழக்கில் உள்ள பெயரினையும் இணைத்துக் குறிக்கப்படும் (கானப்பேரென்னும் காளையார் கோயிற் புராணம்—சுப்பிரமணிய ஐயர்). இத்தல புராணங்கள் பெரும்பாலும் வசனத்துடன் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

69 சதகங்கள் எழுந்து, சதக வரலாற்றில் பத்தொன்பதாம் நூற்றாண்டே மிகுதியாகக் கொண்டது எனும் சிறப்பினைப் பெற்றுள்ளது.[26]

---

* — அரிச்சந்திர நாடகம் : 1. சிவகாமி; 2. தங்கச்சியா பிள்ளை; 3. நரசிம்ம நாயுடு; 4. பத்திராசாமி செட்டியார்; 5. முத்தழக பாரதி; 6. வரதராஜ நாயுடு; நீதிநெறி அரிச் சந்திர நாடகம்; 7. சங்கிலியா பிள்ளை; அரிச்சந்திர உபாக்கியான நாடகாலங்காரம்; 8. நாராயணசாமி அய்யர்; அரிச்சந்திர விலாசம்; 9. அரங்கப் பிள்ளைக் கவிராயர்; 10. அரிச்சந்திர சுவாமிகள், 11. தியாகராஜ சுவாமிகள்; 12. பரசுராமக் கவிராயர்; 13. பிள்ளைக் கவிராயர்; 14. ரங்கப் பிள்ளைக் கவிராயர்; 15. வெங்கட் ராம உபாத்தியாயர்; 16. வேலாயுத முதலியார்; 17. வைத்திய லிங்க தேசிகர்; சத்திய பாஷா அரிச்சந்திர விலாசம்; 18. முத்துச்சாமிப் பிள்ளை; நன்னெறி சத்திய பாஷ அரிச்சந்திர விலாசம்; 19. டி. அப்பாவுப் பிள்ளை.

26. இதுவரை எழுந்துள்ள சதகயிலக்கியங்களாகத் தொகுத் தளிக்கப்பட்டவற்றுள் (89) 43 இந்நூற்றாண்டிற்குரியதாக அமைந்துள்ளமை இதனை உணர்த்தும். பார்க்க; —செயராமன், ந.வீ; சதக இலக்கியம்; 1978; பக். 184-186.

முன்னைய நூற்றாண்டுகளில் அருகிய நிலையில் காணப்படும் மஞ்சரி, காதல், வண்ணம் முதலியன இங்கு ஓரளவு அதிகமாகக் காணப்படுகின்றன.

பரணி, மடல் போன்றன வகைக்கு ஒவ்வொன்றே எழுந்துள்ளமையும் இவண் சுட்டற்பாலது (திருக்கலைசை சிதம்பரேசர் பரணி—தொட்டிக்கலை சுப்பிரமணிய முனிவர்; அழகர்சாமி மடல்—கனகசபைப் புலவர்). புலவர் தம் சிந்தையை அவை கவரவில்லை என்பதை இதற்குரிய காரணமாகக் கொள்ளலாம்.

பிள்ளைத் தமிழ், கலம்பகம், தூது போன்றனவற்றால் இயற்றமிழும், கீர்த்தனை, பதம் போன்றவற்றால் இசைத் தமிழும் பல்வகை நாடகங்களால் நாடகத் தமிழும் இந்நூற்றாண்டில் செழித்திருக்கக் காண்கின்றோம்.

## குறிப்பிடத்தக்க சில நூல்கள்

பத்தொன்பதாம் நூற்றாண்டினைத் தம் தோற்றத்தால் பல நூல்கள் பெருமைப்படுத்தியுள்ளன. அவற்றுள்ளும் சில சிறப்பாகக் குறிப்பிடற்குரியன.

### பிரதாப முதலியார் சரித்திரம் (1879)

புதின விலக்கிய வரலாற்றில் முதலிடத்தைப் பிடித்துக் கொண்ட இதனை இயற்றியவர் மாயூரம் வேதநாயகம் பிள்ளை யாவார். தமிழ்மொழியில், ஆங்கில மொழியில் உள்ளமை போன்று உரைநடையிலக்கியங்கள் இன்மை நோக்கி அதனை நிறைவு செய்யத் தாம் முனைந்ததாக முன்னுரையில் பகன்றுள்ளார்.[27]

நீண்ட தலைப்புகளுடன் விளங்கும் 46 அதிகாரங்களில், கதைத் தலைவன் பிரதாப முதலியாரின் பிறப்பிலிருந்து துவங்கி கல்வி பயின்று, மணம் புரிந்து பல இன்னல்களுக்கிடையில் இறுதியில் நல்வாழ்வு பெற்றமை வரையிலாக இப்புதினம் அமைந்

27. "My object in writing this work of fiction is to supply the want of prose in Tamil, a want which is admitted and lamented by all, and also to give a practical illustration of the maxims of morality contained in my former works Nidinool, Penmady malai Keerthanas.
—Preface to the first edition; பிரதாப முதலியார் சரித்திரம்; வே. ஞா. ச. இருதயநாதன் (பதி.).

துள்ளது. இனிய நகைச்சுவையுடன் நடைபயிலும் இந்நூல் இயன்றவிடங்களிலெல்லாம் மிக நீண்ட அறிவுரைகளைக் கூறிச் செல்கிறது. சிறப்பான வாழ்க்கை எத்தகையது என்பதனைக் கதாசிரியர் இப்புதினத்தால் உணர்த்துகிறார்.

இதன் கதைத் தலைவியான ஞானாம்பாளைக் கற்றறிந்த பெண்ணாக, பண்பாடு நிறைந்த பெண்ணாக, அறிவுத் திறன் மிக்க செயற்பாடுடைய பெண்ணாகக் காட்டி இன்புறுகிறார். 'கற்பலங்காரி சரித்திரம்' போன்ற கிளைக் கதைகளும் இதில் உண்டு. ''சமுதாயத்தை நன்கு பிரதிபலிப்பதுடன் தம் கருத்து களை வெளியிடவும் இதனைச் சிறந்த கருவியாகக் கொண் டுள்ளார்'' எனும் கூற்று[28] மிகப் பொருத்தமாக அமைகிறது.

''யான் அறிந்த வரையில் ஊசோன் பாலந்தை கதைக்கு முன்னதாக, காவலப்பன் கதை என்ற மொழிபெயர்ப்பு நாவல் யாழ்ப்பாணத்தில் 1856ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கிறது. அதனை மூர் என்பார் இயற்றியுள்ளார்......இதுவே தமிழகத்தில்— ஈழத்தில் முதன்முதலாகத் தோன்றிய நாவல் எனக் கொள்ளுதல் வேண்டும்'' என்பர்.[29] ஆயின் பிரதாப முதலியார் சரித்திரம் காவலப்பன் கதை போன்று மொழிபெயர்ப்பன்று. முழுமையாக வேதநாயகம் பிள்ளையின் கற்பனையால் உதித்ததே என்பதுடன், பலராலும் இதுவே தமிழ்ப் புதினவிலக்கியத்துள் முதன்மை வாய்ந்ததாகக் கருதப்படுவதால் இவண் இதுபற்றிக் குறிக்கப் பட்டுள்ளது.

### மனோன்மணீயம் (1891)

தெருக்கூத்து நாடகங்களாகவும், செய்யுளும் உரைநடையும் கலந்த நாடகங்களாகவும் இருந்த நிலையை மாற்றி, முழுமையான நாடக வடிவத்தை மனோன்மணீயம் முதலில் காட்டியது. இந் நூல் ஆங்கிலத்தில் லிட்டன் பிரபு எழுதிய 'இரகசிய வழி' (The Secret Way)—என்பதனைத் தழுவிச் செய்யப்பட்டதாகும்.

''அருமையாகிய பருவ நூல்களைப் பாதுகாத்துப் பயின்று வருதலாகிய முதற் கடமையோடு அவ்வழியே முயன்று அந்தந்தக் கால நிலைக்கேற்றவாறே புது நூல்களை இயற்ற முயலுதல் தமிழ்

---

28. தண்டாயுதம், இரா; நாவல் வளம்; 1975: ப. 22.
29. கணபதிப்பிள்ளை, மு; முன்னுரை; ஈழத்தில் தமிழ் நாவல் வளர்ச்சி; சில்லையூர் செல்வராசன்; 1967; பக். 11-12.

நாடென்னும் உயர்குடியிற் பிறக்கும் ஒவ்வொரு தலைமுறையாருக்கும் உரித்தான இரண்டாம் கடமையாய் ஏற்படுகின்றது"[30] என்று நுவலும் நாடகாசிரியர் சுந்தரம் பிள்ளை அதன் இரண்டாம் கடமைக்குத் தன்னால் இயன்ற நிலையில் இந்நாடகத்தைப் படைத்ததாகக் கூறுகிறார். இதன் மூலம் அன்றைய இலக்கியச் சூழலினை நாம் உணரலாம்.

பாண்டிய மன்னன் ஜீவகனின் மகளான மனோன்மணி, சேரவரசன் புருடோத்தமனை மணம்புரிவதைப் பேசும் இக்கதைக் கருத்து, அதற்குத் தடங்கல்களாக அடுத்துக் கெடுக்கும் குடிலனின் சூழ்ச்சிகளைக் கொண்டு வளர்ந்துள்ளது. சுந்தர முனிவரின் துணையால் அவை நீக்கப்படுகின்றன.

'நாடகக் காப்பியம்' என்று அழைப்பதற்கு ஏற்ற பொருட்களுடன் இது அமைந்துள்ளது. அகப் பொருளை மனோன்மணி—புருடோத்தமன்; வாணி—நடராசன் களவு வாழ்வில் காணமுடிகிறது. குடிலன் சூழ்ச்சியால் பாண்டியனுக்கும் சேரனுக்கும் போர் ஏற்பட்ட காலையில் ஜீவகன் தன் படை வீரருக்கு அளிக்கும் வீரவுரையும், நடக்கும் போரும், புறப்பொருள் நாடகத்துள் முக்கியத்துவம் பெற்றுள்ளமையை இயம்பும். கருணாகரர் நிஷ்டாபரர் அளவளாவலில் சமயத் தத்துவமும், நடராசன் மொழியில் அறிவுரையும் (3:2:13:32) அமைந்திருக்கிறது.

இவை தவிரக் குடிலனின் மகன், புருடோத்தமனிடம் தூது செல்லுதல் (2:3); மனோன்மணி தன் தோழி வாணியைக் கேசாதி பாதமாக வருணித்தல்; குடிலன் நாடகவாரம்பத்தில் நாடு, நகர், மலை, நதி, அரண் முதலியவற்றைச் சிறப்பித்தல் ஆகியனவும் குறிப்பிடற்பாலன.

பாயிரத்துள் தமிழைத் தெய்வமாகக் கொண்டு வாழ்த்திய முதல் கவிஞர் இவர் எனத் தோன்றுகிறது. பொதுவாகக் கதைத் தலைவரின் கேசாதிபாத வருணனை இடம்பெறலே இயல்பு. இங்குத் தலைவியின் தோழி அப்பெருமைக்கு உரித்தாவது புதுமையாகும்.

**விநோதரச மஞ்சரி (1876)**

முதல் கட்டுரையிலக்கியம் என்று சிறப்பிக்கப்படும் இந்நூலின் ஆசிரியர் வீராசாமி செட்டியாராவர். இவர் கட்டுரை எழுதத்

30. மனோன்மணீயம்; கழகம்; 1966; முகவுரை; ப. 29.

துவங்கிய காலம் 1855 ஆகும். ஆயின் 1876இல்தான் அவை நூலுருவம் பெற்றுள்ளன. இதன் பதிப்பாசிரியர் உரை, இந்நூலின் தோற்றம், காரணம், இயல்பு, சிறப்பு எனப்பல நிலைகளில் விளக்குவதாக, அமைகிறது.[31]

இதனுள் பக்தி (தெய்வங் கொள்கை); அறம் (நன்றி மறவாமை); இசை (கீதவாத்திய விநோதம்); சமுதாயம் (கற்பு நிலைமை); வரலாறு (கம்பர் இராமாயணம் பாடி அரங்கேற்றியது) எனும் பல பொருள்கள் பேசப்பட்டுள்ளன.

**காவடிச் சிந்து**

சிந்து, தனித்த இலக்கிய வகையாக உருக்கொண்ட பொழுது காவடிச்சிந்து அமைப்பு முதலில் ஏற்பட்டது. காவடிச் சிந்து என்பது முத்தமிழ்க் கடவுளாம் முருகனுக்கு நேர்த்திக் கடன் செலுத்த மயிலிறகுகளால் அலங்கரிக்கப் பெற்ற காவடியைத் தோளில் சுமந்து செல்லும் பொழுது பாடப்பெறுவதற்கு எழுந்த தாகும் என்று அதன் தோற்றம் குறிப்பர்.[32] பல நூல்கள் பாடி யுள்ள அண்ணாமலை ரெட்டியாருக்கு மங்காப் புகழ் தந்தது

---

31. ''தமிழ்ப் பாஷையினுள் நூல்கள் அனைத்தும் செய்யுள் ரூபமாக இருத்தலின் அவை ஐயந்திரிபறக் கற்றார்க்கு அன்றி மற்றோருக்கு எளிதில் புலப்படாமை நோக்கி, வசன நடையாயிருந்தால் யாவருக்கும் உபயோகமா மென்று கருதி; சென்னைத் துரைத்தன வித்தியாசாலையில் திராவிடாந் தர பாஷா போதகராயிருந்த பெர்ஸிவல் துரையவர்களுடைய அனுமதி கொண்டு ... ... முற்காலத்தி லிருந்த கம்பர், ஔவையார், ஒட்டக்கூத்தர், புகழேந்தி, காளமேகம், வித்துவான்களின் சரித்திரங்களிலும் அவர்கள் பாடிய பாடல்களிலும் சிலவற்றைத் தொகுத்தும், அப் பாடல்களுக்கு உசிதமாக உரையெழுதியும் அவற்றால் உலக வழக்கு, செய்யுள் வழக்குகளை ஒருவாறு விளக்கியும் அவற்றின் இடையிடையே சமயோசிதமும் சாதுரியமுமாகிய பற்பல பழமொழிகளைச் சேர்த்தும் வாசிப்பவர்களுடைய நாவிற்கு நயமும், செவிக் கினிமையும், மனதிற்கு மகிழ்ச்சியும், அறிவிற்கு விருத்தியும், பொழுதுபோக்கிற்கு உல்லாசமும் தரத்தக்க இனிய செந்தமிழ் வசன நடையில் அவ்விஷயங் களை ஒன்றன்பின் ஒன்றாகச் சென்னை மாகாணத்தில் பிரசுரிக்கப்பட்டு வந்த தினவர்த்தமானி என்னும் பத்திரிகை யில் வெளிப்படுத்தி வந்தார்கள்''.
—பாலகிருஷ்ணன், பி.சி., (பதி); முகவுரை; விநோத ரசமஞ்சரி;

32. முத்தப்பன், பழ; சிந்து; தமிழ் இலக்கியக் கொள்கை-6; உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்; ப. 166.

இந்நூலே. சந்தத்திற்குச் சிறப்பளித்துத் தோன்றிய இந்நூல் பக்தியும் அகமும் விரவி வருவதாகும்.

**கதாமஞ்சரி**

"19ஆம் நூற்றாண்டில் முற்றிலுமாக புதிய உரைநடை யொன்று தோன்றியிருக்கிறது. அதுதான் உலக வழக்கை யனுசரித்த அழகிய வசன நடையாகும். இந்நடைக்குக் கர்த்தா என்று சொல்லத் தக்கவர் தாண்டவராய முதலியார்" என்று கால்டுவெல் ஐயரால்[33] சிறப்பிக்கப்பெற்ற தாண்டவராய முதலியாருக்கு அச்சிறப்பினைத் தந்தது அவரின் கதாமஞ்சரி நூலாகும்.

78 குட்டிக் கதைகளைக் கொண்ட இந்நூல் நகைச்சுவை, கருத்துச் செறிவு, அறிவு நுணுக்கம் முதலானவற்றைக் காட்டு கிறது. கதை கூறிச் செல்வது நோக்கமாயினும் அக்கதைகளுள் அறிவு புகட்டுதல் உள்ளடங்கி நிற்கிறது. மக்களின் அறியாமை யைச் சுட்டுதல் (16, 17, 38, 76) நுண்ணறிவுடையோர் பெருமை உணர்த்துதல் (21, 30); பின்பற்ற வேண்டிய ஒழுகலாறுகளை மொழிதல் (40, 55, 57); தவிர்க்க வேண்டிய செயல்களைக் கூறல் (44); பழமொழிகளுக்கு விளக்கமமைத்தல் (14, 42); அரசாட்சி முறைமை நுவலுதல் (67, 69, 70) எனப் பலவாகக் கதைப் பொருட்கள் அமைகின்றன.

**நந்தனார் சரித்திரக் கீர்த்தனை**

முழுவதும் கீர்த்தனையாலாகிய நூல்களைப் படைக்கும் போக்குப் பத்தொன்பதில் தோன்றியது. கோபாலகிருஷ்ண பாரதியாருக்குப் பெருமை தேடித் தந்தது இந்நூல். இதன் பாடல் கள் நாடு முழுவதும் நன்கு பரவின. இதற்கு எதிர்ப்பும் தோன்றியதுண்டு.[34] பிற்காலப் புலவர்கள் பலர் இதன் மெட்டைத் தம் பாடல்களுக்கு அமைத்துள்ளமை இதன் சிறப்பினை உணர்த்தும். பாரதியாரின், 'தொண்டு செய்யும் அடிமை', 'பாரத தேவியின் அடிமை' போன்ற பாடல்களைச் சான்றாகச் சுட்டலாம்.

---

33. சோமலெ; வளருந் தமிழ்; 1968; ப. 41.
34. இராமசாமிப் புலவர், சு.அ; தமிழ்ப்புலவர் வரிசை—5-2; 1956; ப. 7.

**மோகனாங்கி (1895)**

சரவண முத்துப் பிள்ளையால் இம் முதல் வரலாற்றுப் புனைவுப் புதினம் தோன்றியது. திருச்சி, தஞ்சை ஆகிய இரு இடங்களில் நடைபெற்ற வரலாற்றுப் போர் நிகழ்வுகளைக் காதல் என்ற உணர்வடிப்படையில் பின்னிப்புனைந்துள்ளார். இதனுள் பாதிக்குப் பாதி அழகிய கவிதைகள் இடம்பெற்றுள்ளன. இப் புதினம் சில மாற்றங்களுடன் மீண்டும், 'சொக்கநாதர்' என்ற பெயரில் வெளிவந்துள்ளது.

**டம்பாச்சாரி விலாசம் (1867)**

காசிவிசுவநாத முதலியாரால் வெளியிடப்பட்ட இந்நாடகம், உண்மைக் கதையின் பாற்பட்டது. சென்னை நகரைச் சேர்ந்த சிந்தாதரிப்பேட்டையில் வாழ்ந்த ஓர் ஊதாரியின் வாழ்க்கையை ஊன்றிக் கவனித்த ஆசிரியர், பிறர் அவ்வாறு வாழ்ந்து, கெட்டு விடக்கூடாது என்ற ஆவலில் எழுதியுள்ளார். முன்னோர் தேடி வைத்த பெரும் பொருளை டம்பாச்சாரி என்ற வீணன் தாசியான மதனசுந்தரியின் காமவலையில் விழுந்து அழித்த முறையினை மிக விரிவாகப் பல நாள்கள் தொடர்ந்து நடிக்கும் அளவில் நாடகம் எழுதப் பெற்றுள்ளது.

மற்றும் முதல் உரைநடை நாடகமாக விளங்கும் இராமசாமி ராசுவின், 'பிரதாபசந்திர விலாசம்', மிகுந்த புகழ் பெற்று விளங்கிய 'தாசில்தார் நாடகம்', இரண்டு தலைமுறைக்கு முன் திண்ணைப் பள்ளிக் கூடங்களில் கட்டாயப் பாடநூலாகக் கற்கப் பட்டு வந்த, நிர்க்குண யோகி என்பார் எழுதிய 'விவேக சிந்தாமணி' போன்றனவும் சுட்டத்தக்கன.

தமிழ் நாடக நூல்களான ஹரிச்சந்திரன், கோவலன் சரித்திரம், நல்லதங்காள், கண்ணகி, வள்ளி திருமணம் முதலிய நாடகங்கள் கேரளத்திலும் சிறப்புப் பெற்றன. சில நாடகங்கள் மலையாள எழுத்துகளில் அச்சிடப்பட்டன. சுப்பிரமணிய சாஸ்திரியின் சாவித்திரி நாடகம், மீனாட்சி நாடகம் (1890) போன்றன சான்றாம். இதுபோன்றே இந்திரசபா, நூதன பத்மினி சபா, பெரிய இந்திர சபா என்பன தெலுங்கில் அச்சிடப் பட்டன[35] என்பர்.

---

35. மீனாட்சிசுந்தரம், தெ. பொ; பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் நாடகங்கள்; கல்விக் கழகக் கட்டுரை; (புதுவைக் கல்விக் கழகத்தின் வெள்ளி விழா மலர்); 1951; ப. 194.

## பத்தொன்பதாம் நூற்றாண்டின் பெருமைக்குரியோர்

புத்திலக்கியம் படைத்தல், மொழிபெயர்த்தல், பதிப்பித்தல், பழைய நூல்களுக்கு உரை வரைதல், எனப் பல நிலைகளில் பல புலவர்கள் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கிய வரலாற்றில் சிறப்புடையோராகத் திகழ்கின்றனர். அவர்களில் சிலர் தனியாகக் குறிப்பிடத்தக்கவர்.

## இலக்கியப் படைப்பாளர்

**தண்டபாணி சுவாமிகள்**

எண்ணற்ற கவிதைகள் படைத்தவர் என்ற நிலையிலும் பல புதுமைகளைப் படைத்தவர் என்பதிலும் முதல்வராகத் திகழ்கிறார் இவர். முருகதாசர், திருப்புகழ்ச் சாமியார், வண்ணச்சரபம் எனப் பலவாறாகப் போற்றப்படுகின்றார். இவருடைய பெருமை யாவராலும் சரிவரப் புலப்படுத்தப்படவில்லை. இறையருளால் பாடல்கள் பாடிய (பழனித் திருவாயிரம்—பிள்ளைத் தமிழ்-48) இவரின் பாடல்களாக இன்று நமக்குக் கிடைப்பன 49 ஆயிரங்களுக்கும் மேற்பட்டனவாகும்.[36] முருகன் மீது கொண்ட ஊடலால் இவரே தம் படைப்புகள் பலவற்றை அனலிலும் புனலிலும் அழித்துள்ளார். இவரால் பாடல்பெற்ற தலங்கள் 222 ஆகும்.[37] எவ்வகை இலக்கியத்தையும் தன்னால் பாடமுடியும் என்று பாடிக் காட்டியவராகத் திகழ்கின்றார்.

சந்தப் பாடல்கள் பாடுதல் இவருக்கு மிகவும் விருப்பமான ஒன்று. பல்வகைச் சந்தங்களின் அமைப்பு முறைகளையும் அவற்றின் இலக்கணங்களையும் விளக்குவதாக 'வண்ணத்தியல்பு' எனும் இலக்கணத்தை இவர் இயற்றியிருப்பதும் சுட்டத்தக்கது.

முதலொலியல் அந்தாதி, ஏகத்தாள் இதழகலந்தாதி, ஒரு தொடைச் செய்யுள் நிரோட்டக வந்தாதி, வகுப்புச் சந்தத் திருப்புகழ், தசாங்க வகுப்பு, பஞ்சரத்தினக் கோவை, மகுட ஆசிரியப் பதிகம் எனப் பல வடிவங்களைத் தமிழிலக்கியம் இவரால் பெற்றுள்ளது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் வகுப்புப்பாடிய ஒரே புலவராக, அறிந்த வரையில் இவர் காணப்படுகிறார்.

---

36. ஊர்ப் பெயரும் நூற்றொகையும்; கௌமார சபை வெளியீடு; திருவாமாத்தூர்; 1964
37. முன் சுட்டியது.

எழுகூற்றிருக்கை பாடுதலே கடினமானதாக இருக்க, இவர் எண் கூற்றிருக்கை, ஒன்பது கூற்றிருக்கை, தசாங்கக் கூற்றிருக்கை, ஒருபது கூற்றிருக்கை எனப்பல பாடியுள்ளார்.

இலக்கிய வடிவங்களை இணைத்துத் தருவதனைத் திருவாமாத்தூர் பதிகச் சதகம், சடகோபர் சதகத்தந்தாதி போன்றவற்றால் காட்டலாம்.

சூரியன், சிவன், சக்தி, திருமால், கணபதி, முருகன், பொதுக் கடவுள் என்று ஏழு கடவுள்களையும் இணைத்து 'ஏழாயிரப் பிரபந்தம்' என ஒரு நூல் பாடியுள்ளார். வாரத்தின் ஒவ்வொரு கிழமைகளிலும் ஞாயிறு - சூரியன், திங்கள் - சிவன், செவ்வாய் - சக்தி, புதன் - திருமால், வியாழன் - கணபதி, வெள்ளி - முருகன், சனி - பொதுக் கடவுள் என ஒவ்வொரு பதிகமாக நூறு பதிகங் களை, நூறு வாரங்கள் இயற்றி இணைத்தது இப்பிரபந்தமாகும். இதனுள் சூரியமூர்த்திப் பதிகங்கள் மட்டும் ஞாயிறு ஆயிரமாக வெளிவந்துள்ளன.

இவரது நூல்களில் தன் வரலாற்றுக் குறிப்புகள் அதிகமாக உண்டு. அம்பிகை மருந்து கொடுத்த பதிகம், கல் விழுந்திடாதபடி காத்த பதிகம், கைநோய் தீர்த்த பதிகம், தமிழ்க் கவிகள் உதிக்கும் வம்பு சகியாப் பதிகம் எனப் பலவற்றைச் சான்றிற்குச் சுட்டலாம். திருவாமாத்தூர் தலபுராணத்துள் தன் அனுபவத்தையும் பாடி இணைத்திருப்பது குறிப்பிடத் தக்கது.

முருகனால் முற்பிறப்பில் தான் அருணகிரிநாதர் என்று உணர்த்தப்பட்டதாகக் கூறும் இவர் தம் பாடல்களால் பல அற்புதங்களும் புரிந்துள்ளமையை இவரின் தனிப்பாடற்றிரட்டு உணர்த்தும்.

ஆங்கில அரசு எதிர்ப்புணர்வினைக் காட்டும் இப்புலவர் (பழனித் திருவாயிரம் - நவமணிமாலை. 7) பாடல்களில் உயிர்ப் பலி எதிர்ப்பும், ஊன் மறுப்பும் முதன்மைக் கொள்கைகளாக வலியுறுத்தப்பட்டுள்ளன. மொழிப்பற்று, புலமைப் பற்று, இறைப் பற்று என இம்மூன்றும் இணைந்தே இவரது படைப்புகள் அனைத்தும் உள. இந்நிலையினைப் பிற புலவரிடம் காணலரிது. இவரது உரைநடை மிகுந்த எளிமை வாய்ந்தது (சத்திய வாசகம்).

இவரது படைப்புகள் பெரும்பான்மை இன்னும் ஏட்டுச் சுவடி களிலேயே உள. ஒரு சிலவே வெளிவந்துள்ளன. ஏனைய

திருவாமாத்தூர் கௌமார மடாலயத்தாரால் பாதுகாக்கப்பட்டும், பதிப்பிக்கப்பட்டும் வருகின்றன.

**இராமலிங்கர்**

இளமையிலேயே கவிபாடும் திறமை பெற்ற இராமலிங்க சுவாமிகள் வடலூரார் என்றும், வள்ளலார் என்றும் சிறப்பிக்கப் படுகிறார். இவரது பாடல்கள் ஆறு திருமுறைகள் அமைந்த அருட்பாவாகத் தொகுக்கப்பட்டுள்ளன. மனுநெறித் திருநூல், ஜீவகாருணிய ஒழுக்கம் எனும் உரைநடை நூல்களும் படைத் துள்ளார்.

அகப்பொருளில் 54 பதிகங்களும், இசைப்பாடலாக 51 பதிகங் களும் பாடியுள்ளார். திருவருட்பா பதிகங்கள் பெரும்பான்மை யானவற்றிற்குத் தானே தலைப்புக் கொடுத்துள்ளார். அவர் தராதனவற்றிற்குப் பதிப்பாசிரியர் தந்துள்ளனர்.

கீர்த்தனை, கும்மி, சிந்து, கண்ணி போன்ற நாட்டுப்புற வடிவங்களைச் சிறப்பித்துள்ளார். இவரது அருட்பெருஞ்சோதி அகவலே, அகவலிலக்கியத்துள் மிக நீண்டதாகும். நிலை மண்டில ஆசிரியப் பாவாலான அவ்வகவல் 1956 அடிகளான் இயன்றது.

கடவுள் ஒருவரே, ஒளி வடிவில் வழிபடல் வேண்டும்; சிறுதெய்வ வழிபாடு கூடாது; உயிர்ப்பலி கூடாது; சாதிசமய வேறுபாடு காட்டாது ஆன்ம நேய ஒருமைப் பாட்டுடன் வாழ வேண்டும்; ஊன் உண்ணல் கூடாது முதலான கொள்கைகளைத் தம் இலக்கியத்துள் வலியுறுத்தியுள்ளார். இவற்றைத் தம் வாழ்விலும் பின்பற்றியதைச் 'சமரச சுத்த சன்மார்க்க சத்திய சங்கத்தினை' 1865-இல் நிறுவிச் செயல்படுத்தியதன் மூலம் அறியலாம்.

'பாடும் பாட்டெல்லாம் அம்பலப்பாட்டே' என்று இறைவனைப் பாடுதலையே பொருளாகக் கொண்டவர். தேவார, திருவாசக, திருக்குறட் கருத்துகட்கு மிகுந்த சிறப்பளித்துத் தம் பாடல்களுள் போற்றியுள்ளார். மாணிக்கவாசகர் இறையருளுக் காக அழுது தவித்தது போல இவர் தலைவியாகி இறைத் தலைவ னுக்காக ஏங்கி நிற்கக் காணலாம்.

திருவருட்பாத் திருமுறைகளைத் தொகுக்கும் பணியினை 1860-ஆம் ஆண்டு சுவாமிகளின் சீடரான தொழுவூர் வேலாயுத

முதலியார் தொடங்கினார். 1892-இல் முழுமையான பதிப்பு முதன் முறையாகப் பொன்னேரி சுந்தரம் பிள்ளையால் வெளியிடப் பட்டது.

"இந்திய தேசிய எழுச்சிக்குத் தமிழகத்தைப் பொறுத்த வரையில் இராமலிங்கரே முன்னோடியாவார். வள்ளலார் இயற்றி யுள்ள கவிதை வடிவிலான திருவருட்பா ஆறு திருமுறைகளில், ஆறாவது திருமுறையும் உரைநடையிலான ஜீவகாருண்ய ஒழுக்கம், நான்கு விண்ணப்பங்கள், மஹோபதேசம் ஆகியனவும் சமயச் சார்பற்ற சமூக இலக்கியங்களாகும். இவை ஆன்ம நேய ஒருமைப் பாட்டிற்கே யன்றி இந்திய தேசிய ஒருமைப்பாட்டிற்கும் உதவி புரிவனவாகும்" என்று பாராட்டப்படுகிறார்.[38]

## மீனாட்சி சுந்தரம் பிள்ளை

பத்தொன்பதாம் நூற்றாண்டில் பழமை மரபு மீறாது எண்பதிற்கு மேற்பட்ட நூல்களை இயற்றித் தமிழைச் சிறப்பித் தவர். மகாவித்துவான் பட்டம் பெற்றவர். தமிழில் தலபுராணம் பாடிய புலவர்களுள் 22 புராணங்கள் பாடி மிகுதியான தலபுராணங் கள் பாடியவர் என்ற சிறப்பும் பெற்றவர். சித்திரகவிகள் இயற்று வதில் புகழ் பெற்றிருந்த இவர், தம் மாணவர் தேவராச பிள்ளை யின் பெயரில் குசேலோபாக்கியானமும், சூதசங்கிதையும் இயற்றினார் என்ப.[39] யாருக்கு மடல் வரையினும் கவிதை ஒன்றுடன் தொடங்குவது இவர் இயல்பு. தமிழ்த் தாத்தா உ.வே. சாமிநாதையர் இவரின் மாணாக்கர்.

## கிருஷ்ண பிள்ளை

கிறித்தவ சமய இறையியல் தன்மை முழுமையையும் தன்னுள் அடக்கிய ஓர் சிறந்த காப்பியமாகப் போற்றப்படும் 'இரட்சணிய யாத்திரிகத்தை' இயற்றிக் கிறித்தவக் கம்பனாகியவர். இவரது இரட்சணிய மனோகரம் தேவாரப் பாடல்களின் உருக்கத்தைப் பெற்றிலங்குவது. இதனுள் ஒவ்வொரு பதிகமும் தலைப்புப் பெற்றிருப்பதுடன் உட்பொருளை விளக்கி நிற்கும் 'கொளு'வும் கொண்டிருப்பது, இவரிடம் காணப்படும் புதுமை எனலாம்.

---

38. சிவஞானம், ம. பொ; விடுதலைப் போரில் தமிழ் வளர்ந்த வரலாறு; ப. 33.
39. இராமசாமிப்புலவர், சு. அ; தமிழ்ப் புலவர் வரிசை—6 - 3; 1964; ப. 83.

ஆங்கிலத் தமிழ் அகராதித் தொகுப்பாளரான பீட்டர் பெர்சிவல் ஐயரின் தமிழாசிரியர் இவராவார். காவிய தரும சங்கிரகம் எனும் பன்னூற்றிரட்டை (2500 பாடல்கள்) உருவாக்கினார். முதல் பகுதி 512 பாடல்களுடன் 1926இல் வெளியிடப்பட்டுள்ளது. எஞ்சியவை வெளிவந்ததாகத் தெரியவில்லை. முன்பகுதி மீண்டும் 1979இல் வெளிப்போந்துள்ளது.

**வேதநாயகம் சாஸ்திரியார்**

கிறித்தவக் கவிஞர்களுள் குறிப்பிடத் தக்க மற்றொரு பெரும் புலவரான இவர் நூற்றிருபதிற்கும் மேற்பட்ட பக்திப் பனுவல் களை இயற்றியுள்ளார். இவற்றுள் பல இன்னும் அச்சாகவில்லை. கும்மி, தாலாட்டு, ஊஞ்சல் எனப் பல நாட்டுப்புற வடிவங்களைத் தம் இலக்கியத்திற்குப் பயன்படுத்தியுள்ளார். பெத்லகேம் குறவஞ்சியால் பாராட்டப்படும் இவர், 'இராமச்சந்திரக் கவிராயர் அடா மொழிக்கு எதிர்மொழி', 'சாதி தீர்மான ஆட்சேபம்', 'தேச வழக்கு அகராதி', 'வேதத் தொகை அகராதி', பரசமய விளக்கம்' போன்ற பல்வகை நூல்களையும் படைத்துள்ளார்.

**மஸ்தான் சாகிபு**

முகமதியப் புலவரிடையே குறிப்பிடத் தக்கவராகவும், சித்தர் வரிசையில் வைத்தெண்ணப்படும் புகழுடையவராகவும் விளங்கு கிறார். ஆண்டாள், கண்ணனிடம் கொண்ட காதலை, இங்கே மனோன்மணியிடம் தான் கொள்வதன் மூலம் (மனோன்மணிக் கண்ணி) நினைவூட்டுகிறார். தாயுமானவரிடம் இவர் பெற்ற தாக்கத்தை, இவர்தம் நூல்களில் பரவலாகக் காணப்படும் தாயுமானவரின் கருத்துகள் விளக்கும்.

அதிகமான நூல்கள் எழுதியவர் என்ற வரிசையில் கொட்டாம் பட்டி கருப்பையாப் பாவலர்; யாழ்ப்பாணம் சிவசம்புப் புலவர்[40]; அந்தகரான போதிலும் பல நூல்கள் பாடியுள்ள மாம்பழக் கவிச் சிங்க நாவலர்; நாடகம், புதினம் இரண்டிலும் சிறப்புப் பெற்று விளங்கிய நடேச சாஸ்திரியார்; தொழூர் வேலாயுத முதலியார்; பெண்பாற் புலவராகச் சிறப்புப் பெற்ற மனோன்மணி அம்மையார்;

40. ''ஈழ நாட்டில் பிரபந்தம் பாடியவருள் மிக அதிகமாகப் பாடியவர் சிவசம்புப் புலவர். சுமார் 60 பிரபந்தங்கள் பாடியுள்ளார்''.—வித்தியானந்தன், சு; இலக்கியத் தென்றல்; ப. 102.

ஞானசித்தர், காரைக்குடிச் சொக்கலிங்கச் செட்டியார்; தொட்டிக் கலை சுப்பிரமணிய முனிவர்; புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார்; இலங்கை அருள் வாக்கியாரான அப்துல் காதிர் புலவர் முதலான பலரும் இங்கே சுட்டத் தக்கவராவர்.

## மொழிபெயர்ப்பாளர்

எல்லா மொழிகளுமே பிற மொழிகளின் சிறப்பிலக்கியங் களைத் தம்முள் பெறுவதற்கு விரும்புவதுடன் தம்மிடத்துள்ள சிறப்பிலக்கியங்களைப் பிறமொழிகளுக்கு உணர்த்துவதிலும் அக்கறை கொள்கின்றன. இதன் விளைவாக மொழிபெயர்ப்புகள் தோன்றுகின்றன. பழங்காலத்தில் வடமொழியினின்றும் மொழி பெயர்ப்புகளையும், தழுவல்களையும் பெற்ற தமிழ் மொழி, பத்தொன்பதாம் நூற்றாண்டில் அதனுடன் ஆங்கிலம், பிரெஞ்சு, வங்காளி, தெலுங்கு, அரபி முதலிய பிறமொழிகளின் இலக்கியங் களையும் மொழிபெயர்த்துக் கொள்ளத் தொடங்கியது. பழந்தமிழ் இலக்கியங்களும் பிறமொழிகளில் மொழிபெயர்க்கப் படும் சிறப்பினைப் பெற்றன. இருநிலைகளிலும் ஆங்கிலம் முதன்மை வகித்தது. பத்தொன்பதாம் நூற்றாண்டில் அதுவே ஆட்சிமொழியாகவும், வடமொழியின் செல்வாக்கைத் தமிழ ரிடையே கவர்ந்துகொண்ட மொழியாகவும் விளங்கியது இதற்குக் காரணம் எனக் கருதலாம்.

முன் நூற்றாண்டுகளைவிட இந்நூற்றாண்டில் மிகுதியாக மொழிபெயர்ப்பு நூல்கள் தோன்றியதற்குப் புதினம் போன்ற புதிய துறைகளில் தமிழ் வளர்ச்சியடையா திருந்தமையும்; கிறித்தவ, முகம்மதியர்களுக்கு, தம் மதக் கருத்துகளை விளக்கு வதற்கு நூல்கள் தேவைப்பட்டமையும் முக்கிய காரணங்களாக அமைகின்றன எனலாம்.

தம் மதம் பரப்பத் தமிழ் கற்றோர், அதில் தோய்ந்து அதன் நயத்தைத் தம் மொழியில் கொள்ள முயன்ற ஐரோப்பிய கிறித்தவர்களின் பணி போற்றற்குரியது. இதில் டாக்டர். ஜி. யு. போப் முதல்வராகத் திகழ்கிறார். இவரால் திருக்குறள் முதன் முதலில் முழுமையாக 1886இல் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப் பட்டது. இவர் 1893இல் நாலடியினையும் 1900இல் திருவாசகத் தையும், சிவஞான போதத்தையும் மொழிபெயர்த்தார். தம் மொழிபெயர்ப்புப் பணியில் மணிமேகலையைத் தொடங்கியவர் அதனை முடிக்குமுன் இவ்வுலக வாழ்வை நீத்தார்.

எல்லிஸ் பிரபுவாலும் திருக்குறள் ஆங்கிலத்தில் மொழி மாற்றம் பெற்றது, ஹாய்சிங்டன் என்பவர் (H. R. Hoisington) 1854இல் சிவஞானபோதம், சிவப்பிரகாசம், தத்துவக் கட்டளை முதலானவற்றை மொழி பெயர்த்தார்.

டீவ்ரெஜ் (Devrege) என்பார் சகுந்தலை விலாசத்தைப் பிரெஞ்சு மொழிக்கு மாற்றினார்.

தமிழர்களும் ஆங்கிலத்தில் மொழிமாற்றம் செய்தமைக்கு நல்லசாமிப் பிள்ளை சான்றாவார். இவர் உண்மைநெறி விளக்கம், சிவஞானபோதம், சிவஞான சித்தியார், திருஉந்தியார், உண்மை விளக்கம், வினா வெண்பா, கொடிக்கவி, திருவருட்பயன், இருபாவிருபது, சிவபக்த விலாசம் முதலிய சைவ சித்தாந்தங்களை மொழிபெயர்த்துள்ளார்.

நடேச சாஸ்திரி, ஆங்கிலத்தில் இந்துமத விழாக்கள், திராவிட இராக் கதைகள், தென்னிந்திய நாட்டுக் கதைகள், அரசனும் நான்கு மந்திரிகளும், சூரியனுடைய கதைகள், தெனாலிராமன் கதைகள் முதலியவற்றை எழுதியுள்ளார். இவற்றை மொழி பெயர்ப்பு என்று கூற இயலாவிடினும் தமிழ் மண்ணில் வழங்கிய கதைகளை ஐரோப்பியர்களுக்கு அறிமுகப்படுத்தியுள்ளார் எனலாம்.

பிறமொழிகளிலிருந்து தமிழுக்கு வந்தவற்றுள் தலபுராணங் களும், நாடகங்களும் முதன்மை பெறுகின்றன. தலபுராணங்கள் பலவும் வடமொழிப் புராணங்களின் மொழிபெயர்ப்பாக அமை கின்றன. மூலத்தினின்றும் ஒருவர் உரைநடையில் மாற்றித் தரப் பிறிதொருவர் அதற்குச் செய்யுள் வடிவம் கொடுத்தல் பரவலாகக் காணப்படுகிறது. எயினனூர் என்று வழங்கும் ஆதிபுரத் தலபுராணத்தை, வளவனூர் கச்சி சாஸ்திரியார் வடமொழியி னின்றும் உரைநடையில் மொழிபெயர்த்துத் தர அதனைத் தி. க. சுப்பராய செட்டியார் செய்யுள் ஆக்கியமை சான்றாம்.

பல்வேறு மொழியில் உள்ள நாடகங்கள் தமிழாக்கம் பெற் றுள்ளன. சேக்ஸ்பியரின் நாடகங்கள் பல, பலரால் மொழி மாற்றம் செய்யப்பெற்ற சிறப்பினை உடையன. சான்றாக மெர்ச்சண்ட் ஆஃப் வெனிஸ் (Merchant of Venice) எனும் நாடகம் நாராயணசாமி அய்யர், விசுவநாத பிள்ளை, வேணு கோபாலச்சாரியார் போன்றோரால் மொழிபெயர்க்கப் பட்டுள்ளமையைச் சுட்டலாம்.

மோலியரின் பிரெஞ்சு நாடகமான "L'Avare" என்பது அய்யாச்சாமி முதலியாரால் 'உலோபி' ஆக மாற்றம் பெற்றுள்ளது. சோபாக்ளிஸின் கிரேக்க நாடகம் 'எடிபஸ்' (Oedipus) 'மங்கள வல்லி'யாக நாராயணசாமிப் பிள்ளையால் மொழிமாற்றம் கண்டுள்ளது. நாகநாதப் பிள்ளையின் மேகதூதம் வடமொழி நாடகத்தின் மொழிபெயர்ப்பாகும்.

சிறந்த நாடகாசிரியராக விளங்கிய நடேச சாஸ்திரி, பல மொழிபெயர்ப்பு நாடகங்களைத் தந்துள்ளார். வயோலா சரித்திரம் (Twelfth Night) தன்னுயிரைப் போல மன்னுயிரை நினை (Measure for Measure) முத்திராக்ஷஸம் போன்றன சான்றுகள்.

வீ. விசுவநாதப் பிள்ளையின் இராபின்சன் குருசோ சரித்திரம் (1867) மற்றும் தக்காணத்தின் பழைய நாட்கள் (1880) ஆகிய புதினங்கள் மொழிபெயர்ப்பாகும். தாண்டவராய முதலியார், வீரமார்த்தாண்டத் தேவர் போன்றோரால் இயற்றப்பட்ட பஞ்ச தந்திரக் கதைகளின் மூலம், மாராட்டிய மொழி ஆகும். மொழி பெயர்ப்பென அறியப்பட்ட நூல்கள், பின்னிணைப்பாக அமைந் திருக்கும் புலவர் வரிசையுள் (மொழி.) எனும் குறியீட்டால் ஆங்காங்கே சுட்டப்பட்டுள்ளன.

## பதிப்பாளர்

பதினேழாம் நூற்றாண்டில், முதன்முதல், அச்சகம் அம்பலக் காட்டில் கிறித்தவப் பாதிரியாரால் நிறுவப்பட்டது. அதில் தமிழ் நூல்களை அச்சிடற்கு, இன்னாசி ஆச்சாமணி என்பவர் 1679இல் அச்செழுத்துகளை உருவாக்கினார். ஆயின் சுமார் இருநூறு ஆண்டுக் காலம் கிறித்தவர்களே தம் மத நூல்களை அச்சிடப் பயன்படுத்தினர். 1835இல் தான் சுதேசிகளும் அச்சகம் வைத்துக் கொள்ள அனுமதிக்கப்பட்டவர். இக்கால இடைவெளியில் தமிழர் இழந்த பழந்தமிழ்ச் செல்வங்கள் பலப்பல.

தமிழ்ப் பெரு நூல்களை அச்சியற்ற முயன்றவருள் மிகவும் உழைத்தவர் யாழ்ப்பாணத்தைச் சார்ந்த ராவ்பகதூர் தாமோதரம் பிள்ளையாவார். இறையனார் அகப்பொருள், வீர சோழியம், தொல்காப்பியம்—பொருளதிகாரம், இலக்கண விளக்கம், திருத்தணிகைப் புராணம் முதலியவற்றை ஆராய்ச்சி

மதிப்புரையுடன் பதிப்பித்துள்ளார். பதிப்பின் அருமையினை இவர் தெளிவாகக் காட்டியுள்ளார்.[41]

இச்சிறப்பினால் பரிதிமாற் கலைஞரால் ‘தாமோதரம் பிள்ளை சால்பெடுத்துச் சாற்ற எவர் தாமோ தரம்’ என்றும், வேதநாயகம் பிள்ளையால் ‘கோடிப் புலவர் கூடினும் நின் புகழ் கூறலரிதே’ என்றும் புகழ்பாடப் பெற்றுள்ளார்.

எழுபதிற்கும் மேற்பட்ட நூல்களை அச்சிட்ட பெருமையினை ஆறுமுக நாவலர் பெறுகிறார். இவரால் அச்சிடப்பட்டவற்றுள் பரிமேலழகருரை, திருக்கோவையுரை, நன்னூற் காண்டிகையுரை, சேனாவரையம், பிரயோக விவேகம், கந்தபுராணம், சேதுபுராணம், பாரதம், சைவ சமய நெறியுரை, தருக்க சங்கிரகம் முதலியன குறிப்பிடத்தக்கன.

பதினோராம் திருமுறையின் முதல் பதிப்பாசிரியர் சோடசாவதானம் சுப்பராயச் செட்டியாராவார். திருவாசகத்தின் முதல் பதிப்பாசிரியர் கொட்டையூர் சிவக்கொழுந்து தேசிகராவர்' தேவாரங்களைத் தலவரிசையில் பதிப்பித்தவர்களில் முதலாமவர் சி. இராமசாமிப் பிள்ளையாவார். திவாகரம், சூடாமணி, சதுரகராதி முதலியவற்றை முதலில் பதிப்பித்தவர் தாண்டவராய முதலியாராவார்.

சிதம்பரம் இராமலிங்கத் தம்பிரான், மு. ரா. அருணாசலக் கவிராயர் போன்றோரும் சிறந்த பதிப்பாசிரியர்களாகத் திகழ்ந்துள்ளனர். முன்னவரால் குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத் திரட்டு, திருக்கவப் புராணம், சீகாளத்திப் புராணம், வாயு சங்கிதை, வீர சிங்காதன புராணம், சைவ புராணம், திருவிளையாடற் புராணம், சிவராத்திரி கற்பம், தோத்திரப் பிரபந்தம்

---

41. “இலக்கணக் கொத்துடையார், நூலாசிரியர், உரையாசிரியர், போதகாசிரியரென வகுத்த மூவகை ஆசிரியரோடு யான் பரிசோதனாசிரியரென இன்னுமொன்று கூட்டி இவர் தொழில் முன் மூவர் தொழிலினும் பார்க்க மிகக் கூடியதென்றும், அவர் அறிவு முழுவதும் இவர்க்கு வேண்டியதென்றும் வற்புறுத்திச் சொல்லுகின்றேன். தூக்கினாலன்றோ தெரியும் தலைச்சுமை? பரிசோதனாசிரியர் படுங் கஷ்டமும் ஓர் அரிய பழைய நூலைச் சுத்த மனசாட்சியோடு பரிசோதித்து அச்சிட்டார்களன்றி விளங்காது. இவையெல்லாம் அனுபவத்தாலன்றி அறியப்படா பொருள்”.
—தாமோதரம; யாழ்ப்பாணம் கூட்டுறவுத் தமிழ் நூற் பதிப்பு விற்பனைக் கழகம்; ப. 46.

முதலியன அச்சேறின. பின்னவர் வேணுவனத் தலபுராணம், காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ், திருக்குற்றாலத் தலபுராணம், குறவஞ்சி ஆகியவற்றை வெளிப்படுத்தினார்.

பழைய ஏடுகள் மட்டுமின்றிப் பத்தொன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்தோர் பலரின் நூல்களும் அவர்கள் காலத்திலேயே அச்சிடப்பட்டுள்ளன. பொதுவாகப் பதிப்புகள் பலரின் நன்கொடையாலும், முன்பணமளித்தமையாலும், மற்றவரின் தூண்டுதலாலும் நிகழ்ந்துள்ளன. இவர்களின் பட்டியல் அச்சான நூல்களில் நன்றியறிவித்தலுடன் இடம்பெறுதல் உண்டு.

நூலாசிரியரின் முன்னிலையில் நூல் அச்சாகுங்கால் பல நன்மைகள் கிடைக்கின்றன. நூலாசிரியர் தன் விருப்பம்போல் கருத்துகளை மாற்றிக் கொள்ளவும் தன்னுடைய குறிப்பினை உணர்த்திவிடவும் வாய்ப்பு ஏற்படுகிறது. கிருஷ்ணபிள்ளையின் இரட்சணிய மனோகரத்தில் உள்ள பதிகங்கள் முதலில் நற்போதகம் இதழில் வெளிவந்தன. பின்பு அச்சாகுங்கால் அவற்றுள் பல கவிஞரால் விரிக்கவும், மாற்றவும் பெற்றமை சுட்டத்தக்கது. சான்றாக நற்போதகம் இதழில் இரட்சணிய அநுபூதி என்ற பதிகம் நாற்பது பாடல்களுடையதாய் விளங்க நூலுள் குமாராநுபூதி என மாற்றம் பெற்றதுடன் ஐம்பது பாடல்களாகவும் விரிந்துள்ளது.[42]

## உரையாளர்

பழம் நூல்கள் பதிக்கப்பட்டதன் பயனாக அவற்றை உரையுடன் வெளியிடும் நோக்கம் வளர்ந்து பல நூல்கள் உரைபெற்றன. பலர் தங்களைக் கவர்ந்த நூல்களுக்கு உரையெழுதினர். இவ்வுரைகள் நூல் முழுமைக்கும் அல்லது குறிப்பிட்ட பகுதிகளுக்கென அமைந்துள்ளன.

ஆலால சுந்தரம் பிள்ளை, பெரியபுராணம், காஞ்சிப்புராணம், திருப்போரூர்ச் சந்நிதி முறை, திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் இவற்றிற்கு உரை வரைந்தார். பல இலக்கியங்களைப் படைத்திருப்பினும் பின்னத்தூர் நாராயணசாமி ஐயரின் பெயர் நின்று நிலவுவது அவரின் நற்றிணை உரையாலேயாம்.

---

42. இரட்சணிய மனோகரம்; வீ. ஞானசிகாமணி (பதி.); 1978; ப. 14.

காஞ்சிபுரம் சபாபதி முதலியாரால் பெரியபுராணம், திருவிளையாடற் புராணம், பிரமோத்தர காண்டம் முதலியன உரைபெற்றன. ஈழத்தைச் சார்ந்த ம. கதிரைவேற்பிள்ளை திருவாதவூர் புராணம், புலியூர் அந்தாதி, அபிராமி அந்தாதி முதலியவற்றிற்கு உரை செய்தார். ஐதுறாசு நயினார் பாடல் களுக்கு, அப்துல் காதிர் லெப்பை உரை கூறியுள்ளார்.

புரசை அட்டாவதானம் சபாபதி முதலியார், திருத்தணிகை யாற்றுப்படை உரை, கந்தரனுபூதி விருத்தியுரை போன்ற வற்றுடன் தம்முடைய நூலான புரசை இரட்டைச் சொல் யமக மாலைக்கும் உரை கூறினார். தம் நூலுக்குத் தாமே உரை கூறும் போக்கினைத் தண்டபாணி சுவாமிகளிடமும் காணலாம். கௌமார ஏகத்தாள் இதழகலந்தாதி சான்றாம்.

பரஞ்சோதி திருவிளையாடற் புராணத்தின் முதற் காண்டத் திற்கு உரையை இராமசாமிப் பிள்ளை எழுதினார். சோட சாவதானம் சுப்பராயச் செட்டியார் பரஞ்சோதி முனிவரின் திருவிளையாடற் புராணம், கம்பராமாயணம்—அயோத்தியா காண்டம், சிவஞான முனிவரின் காஞ்சிப் புராணம், புலியூர் வெண்பா முதலியவற்றிற்கு உரையெழுதி வெளியிட்டார். மு. ரா. கந்தசாமிக் கவிராயர் கம்பராமாயண ஆரணிய காண்டத் திற்கு உரை கூற, சிதம்பரம் இராமலிங்கத் தம்பிரான், சிவப்பிரகாசரின் நால்வர் நான்மணிமாலை, பழமலையந்தாதி, செந்தில் நிரோட்டக யமக வந்தாதி போன்றவற்றிற்கு உரை தந்தார். மற்றும் திருவண்ணாமலை ஆதீனம் ஆறுமுகத் தம்பிரா னால் நிறுத்தப்பட்ட பெரியபுராண உரையை இவர் தொடர்ந்தார்.

## பத்தொன்பதின் பிற சிறப்புகள்

உரைநடை, தொகுப்பு நூல்கள், ஆய்வு நூல்கள் ஆகியன இங்கு எண்ணப்படுகின்றன.

### உரைநடை

இலக்கண, இலக்கிய உரைகள், கல்வெட்டுகள், மெய்க்கீர்த்தி கள் போன்றவற்றால் வளர்ந்துவந்த உரைநடை ஐரோப்பியர் வரவால் இலக்கியத்துள்ளும புகுந்தது. மதத்தினைப் பரப்புதல் என்பதனையே முழுமையான நோக்கமாகக் கொண்ட இவர்கள் பாமரர்களுக்குத் தங்கள் கருத்தும், கொள்கைகளும் சென்று சேரு

வதற்கு உரைநடையே சிறந்த வழி எனக் கண்டு அதனைப் பின் பற்றினர். போட்டியின் காரணமாக வைதீக மதத்தினரும் அதனை மேற்கொண்டனர். எனவே மதத்தின் பெயரால் உரைநடை வளரலாயிற்று. இவ்வாறு மதத்தின் பெயரால் வளம் பெற்ற உரைநடை சிறிது சிறிதாகப் பிற துறைகளிலும் தன் முக்கியத்துவத்தை நிலைநாட்டியது.[43]

உரைநடையின் தொடக்க காலம் கற்றோருக்கு மட்டுமே புரியக் கூடிய கடிய நடையில் எழுதுவதே பெருமை தரக் கூடியது என்று கருதும் நிலையில் இருந்தது. இதனால் இயல்பான நடையில் இல்லாமல் மிகச் செயற்கையாகச் சொற்களைக் கோவைப்படுத்தி எழுதுவதும், பழைய வரம்புகளுக்குள்ளே நின்று கொண்டு ஒரே அச்சில் வார்த்தாற் போன்ற ஒரே வகையான படைப்புகளைத் தருவதும் காணப்பட்டது. இவற்றைத் தமிழைப் பற்றியிருந்த நோய்களாக எப். டபிள்யூ. கென்னட் என்பார் குறிப்பிடுவார் என்பர்.[44]

இந்நிலையிலேயே உரைநடையின் மறுமலர்ச்சிக்குத் தந்தை யாக ஆறுமுக நாவலர் வந்தார். 'நல்லைநகர் ஆறுமுக நாவலர் பிறந்திலரேல் சொல்லு தமிழ் எங்கே' என்று சிறப்பிக்கப்படும் அளவிற்கு வசனநடை கைவந்த வல்லாளராக மிளிர்ந்தார். சிறார்கள் பொருட்டுப் பாடநூல்களையும், சைவ வினா விடை களையும், சமயக் கதைகளையும் நற்றமிழ் உரைநடையில் இயற்றிய, ''இவராலேயே, தமிழரின் பாரம்பரிய கலாசாரமாகிய சைவம் பிழைத்தது'', என்பர்.[45]

---

43. ''சொற்களுக்கும் தொடர்களுக்கும் நூற்பாவிற்கும் பேருரை கள் எழுதிக் குவித்த காலம் இப்பத்தொன்பதாம் நூற்றாண்டேயாம். பல மேலைநாட்டு இலக்கியங்களை யும் இலக்கிய வளம் செறிந்த நாடகம் முதலியவற்றையும் தழுவியும், தொட்டும் ஏற்றும் குறைந்தும் பல்வேறு உரைநடை நூல்களும் வெளிவநதன. தமிழ்நாட்டு மருத்துவம், சோதிடம் முதலிய பல்வேறு கலைகள் பற்றி யும் பல நூல்கள் மக்கள் முன் வைக்கப்பெற்றன. அந்நூல் களின் சொற்களை விளக்கும் அகராதிகளும் அக்காலததில் வெளிவந்தன.''

—பரமசிவானந்தம், அ.மு; பத்தொன்பதாம் நூற்றாண்டின் உரைநடை வளர்ச்சி, பக். 64-65.

44. இராமலிங்கம், மா; இருபதாம் நூற்றாண்டுத் தமிழிலக்கியம்; 1973; ப. 17.

45. வேலுப்பிள்ளை, ஆ; தமிழர் சமய வரலாறு; 1980; ப. 229.

உரைநடையின் வளர்ச்சி, (1) புதிய இலக்கிய ஆக்கம், (2) பழையனவற்றிற்கு 'வசனம்' என உரைநடைப்படுத்தல் எனும் இரு வகைகளாக அமைந்துள்ளது. ஆங்கிலக் கல்வியின் பயனாக' தமிழிலும் உரைநடையிலக்கியம் தோன்ற வேண்டும்; பரவ வேண்டும் என்று அறிஞர்கள் முயன்றதன் விளைவாகப் புதினம், நாடகம் ஆகியன சிறப்புற்றன. 1875-1900 ஆண்டுகளில் சுமார் 50 புதினங்கள் எழுந்தன என்பர்.[46]

அராபிக் கதைகள் (அண்ணாச்சாமி முதலியார்); விகட விநோதக் கதை (ஏகாம்பர முதலியார்); ஈஸாப் நீதிக் கதைகள் (நடேச சாஸ்திரி) போன்றவற்றுடன் பழையனூர் நீலிக்கதை போன்ற புராணக் கதைகளும் எழுந்தன. சமயத்துறையில் எழுந்த 'கண்டனங்கள்'; 'வாழ்க்கை வரலாறுகள்' போன்றனவும் எண்ணத்தக்கன.

கோ. இராமசாமிப் பட்டாச்சாரியரின் 'தசவதந பஞ்சந சரித்திரம்' இங்குச் சுட்டற்பாலது. இந்நூல் உரைநடையில் திருமாலின் பத்து அவதாரங்களைக் கூறுவதாகும். இது, செய்யுள் வகையில் திருமாலின் பத்து அவதாரங்களைச் சிறப்பிப்பதாக அமையும், பாட்டியல்கள் சுட்டும் 'அரிபிறப்பு' எனும் 'உற்பவ மாலை'யுடன் இணைத்து நோக்கத்தக்கதாம்.

ஆறுமுக நாவலர் போன்றோர் பழந்தமிழ்க் காவியங்களை உரைநடைப்படுத்தி மாணாக்கருக்கும், மற்றவருக்கும் தந்தனர். 1815ஆம் ஆண்டில் திருச்சிற்றம்பல தேசிகர் கம்பராமாயண வசனம், உத்தரகாண்ட வசனம் ஆகியவைகளை இயற்றி இத்தகு நூல்களுக்கு முன்னோடியானார்.

### தொகுப்பு நூல்கள்

அகராதிகளும், கலைக் களஞ்சியமும், நிகண்டுகளும், தொகுப்பு நூல்களாக அமைகின்றன.

ஐரோப்பியர் தமிழ் அகராதிகளின் வளர்ச்சிக்குத் துணை புரிந்துள்ளனர். அமெரிக்காவைச் சார்ந்த வின்சுலோ என்பார், விசாகப் பெருமாளையர், இராமாநுசக் கவிராயர், வீராசாமி செட்டியார், ஆதிமூல முதலியார் முதலிய தமிழ்ப் புலவர்களைத் துணையாகக் கொண்டு 1862இல் 976 பக்க அளவில் ஒரு அகராதி

46. பரமசிவானந்தம், அ.மு; பத்தொன்பதாம் நூற்றாண்டின் உரைநடை வளர்ச்சி; ப. 98.

யைத் தொகுத்துள்ளார். இதில் வானியல், சோதிடம், சமயம், தத்துவம், பழக்க வழக்கம், ஆட்சித்துறை முதலியவற்றைப் பற்றிய சொற்களும், சிறப்புப் பெயர்களும் இடம்பெற்றுள்ளன. தமிழக ராதியை முதன்முதல் தொகுத்தவர் ஆறுமுக நாவலரின் ஆசிரியரான சேனாதிராயர் என்ற குறிப்பும் உண்டு.[47] அ. குமாரசாமிப் புலவரால் இலக்கியச் சொல்லகராதியும், குலாம் காதிறு நாவலரால் அரபுத் தமிழ் அகராதியும் எழுந்துள்ளன. யாழ்ப்பாணம் உடுப்பிட்டிக் கதிரைவேற்பிள்ளையும் ஒரு அகராதி தொகுத்துள்ளார்.

பெர்சீவல் பாதிரியாரும், ஜான்லாசரஸ் என்பாரும் (1894) தனித்தனியே பழமொழிகளைத் தொகுத்தளித்துள்ளனர்.

அ. முத்துத் தம்பிப் பிள்ளை இயற்றிய அபிதான கோசம் பிற்காலத்தில் வெளிவந்த கலைக் களஞ்சியத்திற்கு முன்னோடியாகும். மற்றும் சிறப்புப் பெயர் அகராதி, அபிதான சிந்தாமணி ஆகியவற்றிற்கும் தோற்றக் களம் இந்நூற்றாண்டே.

திருவாக்குப் புராணம் பாடிய கனகசபைப் புலவர் சூடாமணி நிகண்டின் பதினோராவது பகுதிக்குப் பதிலாக 583 செய்யுட்கள் கொண்ட ஒரு நிகண்டும் பாடினார். அரசஞ் சண்முகனாரால் நவமணிக்காரிகை நிகண்டும், மாகறல் கார்த்திகேய முதலியாரால் மஞ்சிகன் ஐந்திணைச் சிறு நிகண்டும் உருவாகின.

### ஆய்வு நூல்கள்

மொழியினையும், இலக்கியத்தையும் ஆய்வுக் கண்ணோட்டத்தில் அணுகுமுறை இந்நூற்றாண்டில் தோன்றியது. தமிழின் தொன்மையினை, தனித்தன்மையை, பெருமையை உலகிற்குத் தம் நூலான, 'தென்னிந்திய மொழிகளின் ஒப்பிலக்கணம்' (A Comparative Grammar of the Dravidian Language - 1856) வாயிலாகக் கால்டுவெல் உணர்த்தினார். வி. கனகசபைப் பிள்ளை, '1800 ஆண்டுகட்கு முன் தமிழகம்' என்ற நூலைத் தம் ஆய்வின் பயனாக அளித்தார். தனித்தமிழ் ஆர்வம் நிரம்பிய பரிதிமாற் கலைஞர் தமிழ் மொழியின் வரலாறு கண்டார்.

ச. பூபாலப் பிள்ளை தமிழ் வரலாற்றினை 'முப்பொருள் ஆராய்ச்சி' எனும் நூலாகக் காட்டினார். பாம்பன் சுவாமிகளால் 'நாலாயிர திவ்விய பிரபந்த விசாரம்' எழுந்தது.

---

47. சுப்பிரமணிய பிள்ளை, கா; இலக்கிய வரலாறு—இரண்டாம் பாகம்; 1970; ப. 409.

மாகறல் கார்த்திகேய முதலியார், தொண்டை நாட்டினைச் சேர்ந்தவர். இவர் எழுதி அச்சாகாமலும், முடிவுறாமலும் சுமார் 16 நூல்கள் உள. மற்றும் 51 நூல்களுக்கான குறிப்புகள் வைத்துள்ளார். இவரின் 'வேளிர் வரலாற்று மதிப்பு', 'தமிழ் விண்ணப்பம்', 'தமிழ்ச்சொல் விளக்கம்', 'மொழிநூல்' முதலான நூல்கள் வெளிவந்துள்ளன.

## இருபதின் வழிகாட்டி

ஒவ்வொரு நூற்றாண்டிற்கும் அதன் முன்னைய காலப்பகுதி சிறந்த வழிகாட்டியாக, அதன் வளர்ச்சிக்கு முன்னோடியாக அமைதல் இயற்கை. அவ்வகையில் இருபதாம் நூற்றாண்டிற்கு இந்நூற்றாண்டு அளித்துள்ள வித்துகள் சில இங்குக் குறிக்கப்படுகின்றன.

(1) எங்கும் தமிழ், எதிலும் தமிழ் என்று மொழிப் பற்றிற்குப் பெருமளவு ஆதரவு நல்கும் பாரதி, பாரதிதாசன் போன்ற இலக்கியக் கர்த்தாக்களின் முதல்வராகத் தண்டபாணி சுவாமிகள் அமைகிறார்.

(2) தேசிய எழுச்சியாகிய நாட்டுப்பற்றும், பக்தியில் எல்லா மதமும் ஒன்றே, ஒரு மதத்தைச் சார்ந்தார் பிற மதத்தைப் போற்றுவதில் தவறில்லை என்ற உணர்வும் இன்று பெரிதும் வளர்ந்து நிற்பனவாம். பத்தொன்பதாம் நூற்றாண்டு, இருபதாம் நூற்றாண்டிற்கு அளித்த மிகச் சிறந்த நன்கொடை இவை எனலாம்.

பாரதியின் தேசிய எழுச்சிக்கு மனோன்மணியம், பிரதாப சந்திர விலாசம் போன்ற நாடகங்களும், எல்லாத் தெய்வங்களையும் பாடலாம் அனைத்தும் சிறப்புடையனவே எனும் சமரச உணர்விற்கு, வேதநாயகம் பிள்ளை, மஸ்தான் சாகிபு போன்றோரும், இசைப் பாடல்களுக்குக் கோபால கிருஷ்ண பாரதியாரும் உந்து சக்திகளாக உள்ளனர் எனலாம்.

(3) இருபதில் வீறுகொண்டு திகழும், புதினம், சிறுகதை, நாடகம் எனப் பல துறைகளையும் கவர்ந்து கொண்டுள்ள சமுதாயப் புரட்சி, சமுதாய முன்னேற்றம், சமுதாயக் குறைபாடு எனும் சமுதாயப் பார்வை (ஒப்புநோக்கு—நா. பார்த்தசாரதி), 'தாசில்தார் நாடகம்', 'முத்து மீனாட்சி' எனும் புதினம் போன்றவற்றில் கால் கொண்டிருக்கக் காணலாம்.

(4) அரசியல் பிரச்சார நாடகமாக அமைந்த ஆரியசபா நாடகம்' இன்று, எழுதப்படும் அரசியலைப் பின்னணியாக உடைய புனை விலக்கியங்களையும் (என்று தணியும் இந்த சுதந்திர தாகம்—சோ.), புதுக் கவிதைகளையும் ஒப்பு நோக்கச் செய்கிறது.

(5) உண்மை நிகழ்வுகளைக் கருத்தாகக் கொண்டு இலக்கியம் படைக்கும் உணர்வு (சிறைக் கதைகள்—புஷ்பா. தங்கதுரை) வளர்ந்து வருவதற்கு முன்னோடியாக 'டம்பாச்சாரி விலாசம்' அமைகிறது எனலாம்.

(6) சாதி பற்றிய நாடகங்களும், புராணங்களும், நிகழ் காலத்தில், தனித்த பிரிவாக வளர்ந்து வரும் வட்டாரப் புனைவு களின் (தலைகீழ்விகிதங்கள்—நாஞ்சில் நாடன்) தோற்றுவாய் எனலாம். இவ்விரண்டும் குறிப்பிட்ட ஒன்றின் நாகரிகம், பழக்க வழக்கம், பெருமை, மொழிநடை, முதலானவற்றிற்குச் சிறப் பளித்தலின் இக்கருத்துத் தோன்றுகிறது.

(7) பெரும் ஆதரவு பெற்று வரும் பயண இலக்கியம்; வளர்ச்சி பெற்றுவரும சொற்பொழிவிலக்கியம் (தமிழ்த் தென்றல் அல்லது தலைமைப் பொழிவு—திரு.வி.க.); கல்கி (ஏட்டிக்குப் போட்டி); மு. வரதராசனார் (குருவிப் போர்); துமிலன் (ஆனந்த ஓவியம்) போன்றோரால் வளர்க்கப்பட்ட, வளர்ந்து வருகின்ற கட்டுரையிலக்கியம் ஆகியவற்றிற்கும் தோற்றத்தைத் தந்து வழி காட்டியுள்ளது.

(8) உரைநடையிலக்கியங்களில் ஆட்கொள்ளப்பட்டிருக்கும் இக்காலப் பகுதிக்கு, அவற்றின் செம்மையான வடிவத்தினைப் புதினம், நாடகம் போன்றவற்றின் மூலம் தந்துள்ளது.

(9) மிக விரிவாக ஆயின் சற்றுக் கடின நடையுடன் காணப் பட்ட ஆய்வு நடை இருபதாம் நூற்றாண்டு அறிஞரால் செம்மைப் படுத்தப்பட்டுள்ளது எனலாம்.

(10) தனிப்பாடல்களைப் பத்தொன்பதாம் நூற்றாண்டு தொகுக்க, இன்றைய நூற்றாண்டு நாட்டுப்புறப் பாடல்களைத் தொகுப்பதில் ஆர்வம் காட்டுகிறது.

(11) வடமொழியில் மட்டுமின்றி, உலகமொழிகள் பலவற்றி லும் உள்ள சிறந்த இலக்கியங்களின் தமிழ் மொழிபெயர்ப்பும் தமிழிலிருந்து பிறமொழிகளுக்கு மாறும் மொழிபெயர்ப்பும் இன்று வெகுவாகப் பரவியுள்ளமை வெளிப்படை.

பொதுவாகக் கூறுவதாயின் பழமையும், புதுமையும் இணைந்து பத்தொன்பதாம் நூற்றாண்டில் வளர, இருபதாம் நூற்றாண்டு அதன் புதுமைகளை எல்லாம் தன்னுள் கொண்டு மேலும் சிறப்புடன் அவற்றை வளர்த்து வருகிறது.

பத்தொன்பதில் தோன்றி இருபதில் தம் புகழை நிறுவியவர்களாகப் பலர் காணப்படுகின்றனர். அவர்களுள் தமிழ்த் தாத்தா டாக்டர் உ. வே. சாமிநாதையர், எண்ணற்ற புதினங்களைப் படைத்த ஆரணி குப்புசாமி முதலியார், நாட்டுப் பற்றுடன் இலக்கியப் பற்றும் கொண்ட வ. உ. சிதம்பரனார்; தனித்தமிழ்த் தந்தை மறைமலையடிகள்; தமிழ்த் தென்றல் திரு.வி.க.; தேசியக் கவி பாரதி; தமிழ் ஆராய்ச்சியின் முன்னோடிகளான மு. இராகவையங்கார்; வெள்ளக்கால் சுப்பிரமணிய முதலியார், எஸ். வையாபுரிப் பிள்ளை, ரா. பி. சேதுப்பிள்ளை, ச. சோமசுந்தர பாரதியார் முதலியோர் ஒரு சிலராவர்.

### முடிவுரை

எண்ணற்ற நூல்கள் எழுந்துள்ள போதிலும் அவற்றுள் பெரும்பான்மை அச்சேறவில்லை; அச்சேறியவற்றுள்ளும் பல பெயரளவில் மட்டுமே அறியத் தகுந்தனவாக உள்ளன; ஏட்டுச் சுவடிகளிலும் இடம்பெறாது அழிந்தவையும் எண்ணற்றவை எனும் இவற்றைத் தமிழ்ப் புலவர் வரிசைத் தொகுப்புகள் உணர்த்து கின்றன.

இலக்கியங்களை எளிமைப்படுத்தும் போக்கு இந்நூற்றாண்டின் சிறப்பியல்பாகும்.

பத்தொன்பதின் பிற்பகுதி இலக்கிய வரலாற்றிற்குச் சிறப்பளிப்பதாகவும், மொழிவளர்ச்சிக்கு ஆக்கம் அளிப்பதாகவும் (அகராதி, ஆய்வு நூல்கள்) அமைந்துள்ளது. தொல்பொருளாய்வு 1874இலும், கல்வெட்டாராய்ச்சி 1890இலும் தோன்றியமை சுட்டத்தக்கன.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கிய வளர்ச்சிக்கு ஈழத்துத் தமிழறிஞர் தொண்டு மிகவாக அமைகிறது.

மலேசிய நாட்டில் குறிப்பிடத் தக்க வளர்ச்சியைக் காண இயலவில்லை.

# பத்தொன்பதாம் நூற்றாண்டு இலக்கியம்
## அகரவரிசை—அறிமுகம்

ஆய்வுக்களம் பத்தொன்பதாம் நூற்றாண்டாதலின் அந் நூற்றாண்டில் தோன்றியுள்ள இலக்கியங்கள், புலவர்களின் அகர வரிசை தனித்தனியே இங்குத் தரப்பட்டுள்ளன.

பத்தொன்பதாம் நூற்றாண்டென்பது 1800 தொடங்கி 1900 வரையுள்ள ஆண்டுகளைக் குறிக்கும். இக்கால வரையறைக்குள் புலவரைக் கணக்கிடுதல் இயலாது. ஏனெனில் பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் பிறந்து இந்நூற்றாண்டில் மறைந்தவரும் இந்நூற்றாண்டில் பிறந்து இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மறைந்தவரும் எனப் பலரி உளர். இவர்களது நூல்கள் மிகுதியும் பத்தொன்பதின் பாற்படுவதால் இவர்களையும் இணைத்து இந்நூற்றாண்டுப் புலவர் எண்ணப்பட்டுள்ளனர்.

முதலாவதாக இலக்கியங்களின் அகரவரிசை அமைகிறது. தோன்றியுள்ள இலக்கியங்கள் அனைத்திற்கும் அதன் தோற்ற காலம் அறியாமையின் காலத்தினை அடிப்படையாகக் கொண்டு அவற்றை வகைப்படுத்தல் இயலாது. எவ்வகைப் பகுப்புமின்றி ஒரே அகரவரிசையாகக் கொள்வதாலும் பயனில்லை. எனவே இலக்கிய வகைகளின் அடிப்படையில் பகுத்துத் தரப்பட்டுள்ளன.

இலக்கிய வகைகளின் அகரவரிசை இருபகுதிகளில் அமைகிறது. முதற்பகுதி பாட்டியல்கள் தரும் இலக்கிய வகைகளுடன், தனித்த இலக்கிய வகைகளாகக் கருதத்தக்கனவும் தரப்பட்டுள்ளன.

ஒவ்வொரு வகையின் தொடக்கத்திலும் அது பற்றிய சிறு குறிப்பு பாட்டியல்களின் விளக்கத்தினை ஒட்டித் தரப்பட்டுள்ளது. பாட்டியல்கள் தராத வகைகட்கு இயன்றளவு விளக்கம் கொடுக்கப் பட்டுள்ளது.

இலக்கிய வகைப்பாட்டுக்குள் அடக்க இயலாதனவற்றை அற நூல்கள், பக்தி நூல்கள், இசைப்பாடல்கள், பல்வகைப்பாடல்கள், பொது எனப் பகுத்து இரண்டாம் பகுதியில் தரப்பட்டுள்ளன. முதலிரண்டும் பொருண்மை நிலையிலும், பின்னிரண்டும் செய்யுள் வடிவம் என்ற நிலையிலும், எப் பகுப்பிற்கு உட்பட்டது என உணர முடியாதன இறுதியிலுமாக இங்கு அமைகின்றன.

ஒரு இலக்கிய வகையின் பாற்படுவனவாக, தொடர்புடையன வாகக் கருதப்படுவன அனைத்தும் அதன் கீழே வரிசைப்படுத்தப் பட்டுள்ளன. சான்றாக, அந்தாதியை எடுத்துக் கொண்டால் அந்தாதியின் கீழ் இதழகலந்தாதி, ஏகபாதத் தந்தாதி, ஓரெழுத் தந்தாதி, ஒலியந்தாதி, கலித்துறை யந்தாதி... என அவை ஒருங்கே தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

தனிப்பாடல், சீட்டுக்கவி, இசைப்பாடல் ஆகியவற்றில் அதன் ஆசிரியர் வரிசையே தரப்பட்டுள்ளது.

புலவர் அகரவரிசை அடுத்து அமைகிறது. குறிப்பிட்டப் புலவரின் காலம் தெளிவாகத் தெரியின் அப்புலவர் பெயரின்பின் சுட்டப்பட்டுள்ளது. தோற்றம் அல்லது மறைவு ஆண்டு மட்டுமே அறியப்படின் அதுவும் கொடுக்கப்பட்டுள்ளது. ஒரு சிறு கோடு ஆண்டின் பின் இருப்பின் அது தோற்றத்தினையும்; ஆண்டின் முன் இருப்பின் மறைவினையும் குறிக்கும். புலவருக்கு வேறு பெயரோ அன்றிச் சிறப்புப் பெயரோ இருப்பின் அது அடுத்தபடியாக அடைப்புக் குறிக்குள் தரப்பட்டுள்ளது.

அடுத்த நிலையில் புலவரின் ஊர்ப்பெயரும், தொடர்ந்து பெற்றோர் பெயரும் உளது. அறியப்படாத இடங்களில் சிறு கோடு அமைந்து அதனை உணர்த்துகிறது.

அவற்றின்பின் அவரால் எழுதப்பட்ட நூல்கள் அகரவரிசை யில் அமைந்துள்ளன. அவ்வவ் நூல்களின் அருகில் அந்நூலின் தோற்றம் அல்லது பதிப்பு ஆண்டு அறியப்படின் குறிக்கப் பட்டுள்ளது. சான்றாக,

353. கந்தசாமிப் பிள்ளை, து. ந. 19இன் முற்பகுதி.

தூத்துக்குடி;—

தனிப்பாடல்கள்

தூத்துக்குடி சங்கர ராமேஸ்வரர்புகழ் பெறந்தாதி 1896

தூத்துக்குடி பாகம் பிரியாள் பேரில் வேண்டுவரம் பெறுமாலை 1896

முருகன் தோத்திரப் பாமாலை.

எனும் குறிப்பைக் காட்டலாம்.

இவ்வகரவரிசைகளினால் பத்தொன்பதாம் நூற்றாண்டின் இலக்கியப் படைப்பாளர் பற்றியும், அவர்களின் ஆக்கங்கள் பற்றியும் அறியமுடிகிறது. தோன்றியுள்ள இலக்கிய வகைகள் பற்றியும் அவை பெற்றுள்ள இடத்தினையும் அவற்றின் எண்ணிக்கையால் உணரலாம். மிக அதிகமாக இலக்கியம் படைத்தவர்; மிக அதிகம் அல்லது அருகிய நிலையில் உள்ள இலக்கிய வகை; எவ்வகையிலக்கியம் யாரால் (அதிகமாகப் பாடியதன் மூலம்) சிறப்பிக்கப் பட்டுள்ளது; புதிய இலக்கிய வகைகளின் தோற்ற கர்த்தாக்கள் யாவர் முதலான விளக்கங்களைப் பெறலாம்.

இலக்கிய வரலாற்றாய்வு தெளிவாகும் போதும், ஏட்டுச் சுவடியாக உள்ளவற்றின் விபரம் முழுமையாக அறியும்பொழுதும், அடிப்படைக் கருவிகளின் (Source Materials) துணை இன்னும் மிகும்பொழுதும் இவ்வகரவரிசை விரிவடைய வாய்ப்புண்டு.

தொகுப்பிற்கு உதவிய சென்னை மாநகர நூலகங்கள் :

1. உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம்.
2. டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்.
3. மறைமலையடிகள் நூல் நிலையம்.

முதன்மை நூல்கள் :

1. இலக்கிய வரலாறு—இரண்டாம் பாகம்
   கா. சு. பிள்ளை,
   ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், 53-56, பவளக்காரத் தெரு சென்னை-1.

2. ஈழமும் தமிழும்
   F.X.C. நடராசா (தொகுப்பு),
   கலைமகள் வெளியீடு.

3. சிற்றிலக்கியச் செல்வங்கள்
ந. வீ. செயராமன்,
மணிவாசகர் நூலகம், சிதம்பரம், மு.ப.
அக்டோபர், 1967.

4. தமிழ் நாடக வரலாறு
சக்திப் பெருமாள்
வஞ்சிக்கோ பதிப்பகம், மதுரை-18, முதற் பதிப்பு,
டிசம்பர், 1979.

5. தமிழ்ப் புலவர் வரலாற்றுக் களஞ்சியம், பகுதி-I (அ-ஔ)
(Biographical Dictionary of Tamil Men of letters)
வ. சுப. மாணிக்கம் (பொது பதிப்பாசிரியர்)
அண்ணாமலைப் பல்கலைக் கழகம், 1974.

6. தமிழ்ப் புலவர் அகராதி
ந. சி. கந்தையா பிள்ளை

7. தமிழ்ப் புலவர் வரிசை, பகுதி—1-10
சு. அ. இராமசாமிப் புலவர்
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்
கழகம் லிமிடெட், சென்னை.

8. பத்தொன்பதாம் நூற்றாண்டில் தமிழ் இலக்கியம் (1800-1900)
மயிலை. சீனி. வேங்கடசாமி
சாந்தி நூலகம்; 2/122, பிராட்வே, சென்னை-1,
முதற் பதிப்பு, ஜூன், 1962.

9. Classified Catalogue of Tamil Printed Books
(With Introductory Notices)
John Murdock (Compiler),
Tamil Development and Research Council,
Government of Tamil Nadu, Reprint, 1968.

# இலக்கிய வரிசை

## 1. அகவல்

எடுத்துக் கொண்ட பொருளை அகவற் பாவினால் பாடுவது.

| | | |
|---|---|---|
| 1 | அகத்தியர் அகவல் | ஞானசித்தர் |
| 2 | அரசடி விநாயகரகவல் | பூபாலபிள்ளை, ச. |
| 3 | அருட்பெருஞ்ஜோதி அகவல் | இராமலிங்க சுவாமிகள் |
| 4 | இராமாயண அகவல் | நாராயணசாமி ஐயர் |
| 5 | உலகநாதசாமி சரித்திர அகவல் | முருகேசக் கவிராயர், ப. |
| 6 | சாத்தனார் அகவல் | தண்டபாணி சுவாமிகள் |
| 7 | சுப்பிரமணியர் ஐம்பூத ஐக்கிய முத்தி இலக்கண அகவல் | இராமசாமி ஐயர், ஒ.வெ. |
| 8 | திருமுக அகவல் | இராமலிங்க சுவாமிகள் |
| 9 | திருவாவடுதுறை யாதீனத்துக் குருபரம் பரையகவல் | மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| 10 | பூசாவிதி அகவல் | முத்துக்குமாரத் தம்பிரான் |
| 11 | போற்றித்திரு அகவல் | கிருஷ்ணப் பிள்ளை |
| 12 | விநாயகர் சரித்திரச் சுருக்க அகவல் | முருகேச முதலியார் |
| 13 | வில்லிப்பாக்கம் விநாயகர் அகவல். | தண்டபாணி சுவாமிகள். |

## 2. அட்டகம்

அட்டகம் எனும் வடசொல் எட்டு; எண் வகை எனப் பொருள் படும். எனவே எட்டுப்பாடல்களில் அல்லது எண்வகைகளில் குறிப் பிட்ட பொருளைப் பாடுதல் அட்டகம் எனலாம். எட்டுப்பாடல் களில் இறைவனைப் பாடுதல் அல்லது பாட்டுடைத் தலைவனுக்

காக இறைவனை வேண்டிப் பாடுதல் அட்டமங்கலம் எனப் பன்னிருபாட்டியல் (இ. 105) முதலான கூறுவது இவண் இணைத்து நோக்கற்பாலது.

| | | |
|---|---|---|
| 1 | அருட்பெருஞ்சோதி அட்டகம் | இராமலிங்க சுவாமிகள் |
| 2 | சண்முக சரணாட்டகம் | வேலாயுத முதலியார், தொழுவூர் |
| 3 | சிற்சத்தி யட்டகம் | பொன்னையா முதலியார் |
| 4 | சுகாட்டகம் | பொன்னையா முதலியார் |
| 5 | ஞானசிகாமணி திருச்சூர் அட்டகம் | இராமலிங்க சுவாமிகள் |
| 6 | வடிவுடையம்மன் சவுந்திரி யாட்டகம் | வேலாயுத முதலியார், தொழுவூர். |

## 3. அட்டவணை

அட்டவணை என்ற சொல் செய்திகளைத் தொகுத்து முறைப் படுத்தி செவ்வையாக்கித் தரலைக் குறிக்கும். எடுத்துக்கொண்ட பொருளைச் செம்மையாகப் பகுப்புகளுடன் விளக்கித் தருதற்காக இப்பெயர் கொண்டது போலும்.

1. பதிபசுபாச அட்டவணை — அம்பலவாண தேசிகரின் சீடர்.

## 4. அந்தாதி

பொதுவாக, ஏதேனும் பொருள் பற்றி நூறு பாடல்கள் வெண்பாவிலேனும். கலித்துறையிலேனும் அந்தாதியாக அமைவன அந்தாதியாகும். இங்குப் பலவகை அந்தாதிகள் அமைகின்றன. பத்துப்பாடல்களால் அந்தாதித்து அமைதல் பதிற்றந்தாதி; நூறு பாடல்கள் கொண்டது பதிற்றுப்பத்தந்தாதி அல்லது நூற்றந்தாதி; நான்கு அடிகளுக்கு, ஓரடிக்குப் பதினாறு கலையாக அறுபத்து நான்கு கலை வைத்து, பல வண்ணங்களும் அமைத்து அந்தாதியாக முப்பது பாடல்கள் அமைதல் ஒலியந்தாதியாம்—சிறுபான்மை ஓரடியில் எட்டுக் கலைகளே இடம் பெறும்; வெண்பா, கலித்துறை, அகவல் மூன்றற்கும் பத்துப் பத்துப் பாடல்களாக அந்தாதித்துப் பாடினும் இவ்வகை ஆகும்; முப்பது கட்டளைச் செய்யுட்கள் அல்லது வெண்கலிப்பாக்கள் அந்தாதியாக வருவது கலியந்தாதி எனப் பாட்டியல்கள் விளக்கமளிக்கின்றன. இவை போன்றே இங்கே அமையும் பிற பகுப்புகள் யாப்பு (கலி விருத்த அந்தாதி); சொல்லணி (திரிபந்தாதி, யமகவந்தாதி); முதலானவற்றால் வேறு பட்டு அமைகின்றன எனலாம்.

| | | |
|---|---|---|
| 1 | அண்ணாமலை அந்தாதி | கந்தப்ப ஞான தேசிகர் |
| 2 | அத்திகிரி யந்தாதி | பள்ளிகொண்டான் பிள்ளை |
| 3 | அருட்பிரகாசர் அற்புத வந்தாதி | கந்தசாமிப் பிள்ளை, ச.மு. |
| 4 | அளகை உமையந்தாதி | சண்முகம் செட்டியார், அ. |
| 5 | ஆங்கிலியர் அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 6 | இணுவையந்தாதி | அம்பிகைபாகர் |
| 7 | இலக்குமியந்தாதி | கருப்பையா பாவலர் |
| 8 | இலக்குமியந்தாதி | பொன்னையா முதலியார் |
| 9 | உலகுடையம்மை அந்தாதி | நமச்சிவாயக் கவிராயர் |
| 10 | எழுகூற்றந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 11 | ஒற்றைக்கடை விநாயக ரந்தாதி | அருணாசலக் கவிராயர், மு.ரா., |
| 12 | கங்கை அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 13 | கருவையந்தாதி | அண்ணாமலை ரெட்டியார் |
| 14 | கல்வளை அந்தாதி | இராமலிங்கம் பிள்ளை, வை. |
| 15 | கல்வளை அந்தாதி | சின்னத் தம்பிப் புலவர் |
| 16 | கவிவிடந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 17 | கழுகாசலத்தந்தாதி | அருணாசலத் தேவர், வெ. |
| 18 | கன்னியாகுமரிப் பகவதி யந்தாதி | ஞானசித்தர் |
| 19 | காஞ்சி அத்திகிரி அந்தாதி | கந்தசாமிப் பிள்ளை, கு. |
| 20 | குடந்தையந்தாதி | மீனாட்சிசுந்தரம் பிள்ளை |
| 21 | குமரனந்தாதி | மாம்பழக் கவிச்சிங்க நாவலர் |
| 22 | குருநாதன் அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 23 | கைலாசவிநாயகர் அந்தாதி | சண்முகம் செட்டியார், அ. |
| 24 | கோமதியந்தாதி | அண்ணாமலை ரெட்டியார் |
| 25 | கௌமாரதிருவந்தாதி | செந்தில்நாயக அடிகள் |
| 26 | சங்கர நயினார் கோயில் அந்தாதி | அழகிய சொக்கநாத பிள்ளை |
| 27 | சங்களை அந்தாதி | இராமலிங்கம் பிள்ளை, வை. |
| 28 | சரசுவதி யந்தாதி | வேலாயுதப் புலவர். வைரக்கண் |
| 29 | சற்குரு அந்தாதி | இராமாநந்த அடிகள் |
| 30 | சிங்கை நகரந்தாதி | சதாசிவ பண்டிதர் |
| 31 | சித்தர் அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 32 | சித்திநகர் அந்தாதி | இராசப்ப நாவலர் |
| 33 | சிதம்பர தேசிகரந்தாதி | ஆத்துமாநந்த அடிகள் |
| 34 | சிவபூசையந்தாதி | அழகிய சொக்கநாத வரோதயன் |

| | | |
|---|---|---|
| 35 | சிறுக்குளம் விநாயகரந்தாதி | தாமோதரம் பிள்ளை, க. |
| 36 | சிறைவிடந்தாதி | குருகையூர் வைணவப் புலவர் |
| 37 | சுங்குரும்மையந்தாதி | முத்தையா, இலக்கண. |
| 38 | செம்பொனந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 39 | சேடகிரியந்தாதி | பள்ளிகொண்டான் பிள்ளை |
| 40 | ஞான அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 41 | ஞான அந்தாதி | வேதநாயகம் சாஸ்திரியார் |
| 42 | திரிகோணமலை அந்தாதி | ஆறுமுகம், க. |
| 43 | திருக்கச்சி அந்தாதி | இராமாநுசம் பிள்ளை |
| 44 | திருக்கச்சி வரதரந்தாதி | நாராயணசாமிப்பிள்ளை, வே.கி. |
| 45 | திருக்குருகூர் மாறனந்தாதி | பெரிய திருவடி கவிராசர் |
| 46 | திருச்செந்திற்றிருவந்தாதி | சிவசம்புப் புலவர் |
| 47 | திருச்செந்தூர் சுப்பிரமணியரந்தாதி | இராமசாமியா பிள்ளை |
| 48 | திருத்தணிகையந்தாதி | வேங்கடாசல முதலியார் |
| 49 | திருப்பகுதந்தாதி | அப்துல் காதிர் புலவர் |
| 50 | திருப்பரங்குன்றத் தந்தாதி (குமரன் அந்தாதி) | சபாபதி முதலியார், மதுரை |
| 51 | திருப்பதி அழகரந்தாதி (அழகாயிரத்தந்தாதி) | வேலாயுத முதலியார், தொழுவூர் |
| 52 | திருப்போரூர் அந்தாதி | முத்துக்குமாரத் தம்பிரான் |
| 53 | திருமக்காத் திருவந்தாதி | குலாம் காதிறு நாவலர் |
| 54 | திருமயிலைக் கற்பகவல்லியந்தாதி | மனோன்மணி அம்மையார் |
| 55 | திருமயிலைக் கற்பகவல்லியந்தாதி | பிச்சை இபுராகிம் புலவர் |
| 56 | திருமலைக்குமரன் அந்தாதி | முருகதாசக் கவிராசர் |
| 57 | திருமாலந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 58 | திருமுக்கூடல் அந்தாதி | விசயராகவப் பிள்ளை |
| 59 | திருமுல்லைவாயில் கொடியிடை நாயகி அந்தாதி | மனோன்மணி அம்மையார் |
| 60 | திருவருளந்தாதி | வேதநாயகம் பிள்ளை |
| 61 | திருவல்லிக்கேணி யேமுகர் அந்தாதி | பாலகிருஷ்ண நாயுடு |
| 62 | திருவாடானை அந்தாதி | பிச்சுவையர் கல்போது |
| 63 | திருவானைக்கா அகிலாண்டநாயகி அந்தாதி | மனோன்மணி அம்மையார் |
| 64 | திருவேரகத்தந்தாதி | வேலையர், கவித்தலம் |

| | | |
|---|---|---|
| 65 | திருவையாற்றந்தாதி | இராமசாமி சிவன் |
| 66 | திருவொற்றியூர் அந்தாதி | ஞானசம்பந்த வரன் |
| 67 | தூத்துக்குடி சங்கர ராமேஸ்வரர் புகழ் பெறந்தாதி | கந்தசுவாமிப் பிள்ளை, து.ந. |
| 68 | தேவமாதா அந்தாதி | வேதநாயகம் பிள்ளை |
| 69 | நல்லையந்தாதி | சேனாதிராய முதலியார் |
| 70 | நாகையந்தாதி | செய்கு அப்துல்காதிறு நயினார் அலிம் |
| 71 | நாகையந்தாதி | சேகனா லெப்பை |
| 72 | நாதகிரி அந்தாதி | பிச்சையா நாவலர் |
| 73 | நித்தியகவி அந்தாதி | மீனாட்சிசுந்தர முதலியார், கு. |
| 74 | நெல்லை வடிவம்மை யந்தாதி | அருணாசலம் பிள்ளை |
| 75 | பசுந்தையந்தாதி | முத்துச்சாமி ஐயர் |
| 76 | பசுபதீச்சுரன் அந்தாதி | முத்துக்குமரசாமி குருக்கள் |
| 77 | பரவாசுதேவர் திருவந்தாதி | ஐயாச்சாமி முதலியார் லீலா விநோதினியம்மாள் |
| 78 | பாறைக் கிணற்றந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 79 | புதுவை கௌமார அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 80 | புலியூரந்தாதி | சிவானந்தையர் |
| 81 | புலியூரந்தாதி | மயில்வாகனப் புலவர் |
| 82 | பெருமாளந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 83 | பெருமானந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 84 | பேரொலியலந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 85 | மகரவந்தாதி | சரவணப்பெருமாள் கவிராயர் |
| 86 | மகாமாரியம்மன் அந்தாதி | பூபாலபிள்ளை, ச. |
| 87 | மயிலத்தந்தாதி | பெரியசாமிப்பிள்ளை |
| 88 | மயிலாசலத் தந்தாதி | சின்னைய தேசிகர் |
| 89 | மயிலை யந்தாதி | சுப்பிரமணியக் கவிராயர் |
| 90 | மருதடியந்தாதி | அப்பாத்துரைப்பிள்ளை |
| 91 | மறைசையந்தாதி | சிவசம்புப்புலவர் |
| 92 | மறைசையந்தாதி | சின்னத் தம்பிப் புலவர் |
| 93 | மாவை அந்தாதி | சபாபதி நாவலர் |
| 94 | மாவை அந்தாதி | பொன்னம்பலம்பிள்ளை, மாவை |
| 95 | முருகன் கௌமார அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 96 | வண்ணை அந்தாதி | தண்டபாணி சுவாமிகள் |
| 97 | வண்ணை அந்தாதி | சதாசிவபண்டிதர் |

